இலக்கியத் தேன்சாரல், பெங்களூர்

வழங்கும்

# பொங்கலைப் போற்றுவோம்!



இலக்கியத் தேன்சாரல், பெங்களூர்

வழங்கும்

# பொங்கலைப் போற்றுவோம்! 2021


தொகுத்தவர்கள் :

**கே.ஜி. ராஜேந்திரபாபு, ஜெய்சக்தி**

**ம. மதலைமணி**





வெளியீடு :

**தமிழ்த்தேன் பதிப்பகம்**

137ஆ, முதல் தளம், சுண்டக்காமுத்தூர் பைபாஸ் ரோடு

2ஆவது தெரு, திருநகர், கோயமுத்தூர் - 641026

செல். 9842232646

அன்புள்ள இலக்கிய தேன்சாரல் குழு நண்பர்களுக்கு வணக்கம்.

*''பொங்கலோ பொங்கலெனப் பொங்கிய இப்*
*பங்கயக் கவிதைகளின் பவனிக்கு சங்கத் தமிழ்*
*தங்கத்தேர் தயாராகி நிற்கின்ற பேரழகை*
*எங்கள் தோழர்களே வரவேற்றுப் பாடிடுக!''*

வெண்பொங்கலோடு சர்க்கரைப் பொங்கலையும் இணைத்துப் பரிமாறுகிற பாங்கில் கவிதைகளைப் பெங்களூர்த் தோழர்கள் குவித்துள்ளார்கள். அந்த மலரில் நெற்றியில் சந்தனத்தை இட்டுக் குங்குமத்தில் பொட்டு வைத்ததுபோல் கவிதாயினி ஜெய்சக்தியும், கவிஞர் ராஜேந்திர பாபுவும் வழங்கியுள்ள கவிதைகள் இரண்டும் நெஞ்சை அள்ளுகின்றன.

''இயற்கையாய் வாழ்தலே என்றும் இனிமை'' என்கிறார் ஜெய்சக்தி.

ராஜேந்திர பாபுவோ ''கூனல் குணத்தைக் குறிஞ்சிமலை போல் நிமிர்த்துவதாக''க் கூறுகிறார்.

பொங்கல் தினக் கவிதையில் சூரியப் பிரகாசம்போல் கருத்துக்களின் பிரகாசம். வாசிக்க வாசிக்க யோசிக்க வைக்கிறது. சுவைக்கச் சுவைக்கச் சுவை கூடுகிறது.

இதன் ரகசியம் என்ன? வேறொன்றுமில்லை. தமிழ் அதில் உறங்குகிறது.

உறங்கும் தமிழே! நம்மைக் கிறங்க வைக்கிறதென்றால், அதுவே விழித்துவிட்டால் நம்மை என்ன பாடுபடுத்துமென எண்ணித்தான் பார்க்கவேண்டும்.

அன்புடன்

**கவிஞர். பெ. சிதம்பரநாதன்**

# இலக்கியத் தேன் சாரல் - பொங்கல் மலர் 2021

இலக்கியத் தேன் சாரல் என்ற அமைப்பு பெங்களூரில் 2017 ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் தொடங்கப்பெற்றது

நாவலாசிரியர் ஜெய்சக்தியும் கவிஞர்.கே ஜி ராஜேந்திரபாபுவும் முடிவெடுத்து கவிஞர்.அமரன், திரு.பத்மநாபன், கவிஞர் ஹரீஷ் சின்னராஜன் ஆகியவர் கூட்டுறவோடு அனைவரும் ஒரு குழுவாக இருந்து இலக்கியத் தேன் சாரல் என்ற அமைப்பைப் பெங்களூருவில் உருவாக்கினோம்.

பல்வேறு தலைப்புகளில் இலக்கிய நிகழ்ச்சிகள் நடத்தினோம். குறிப்பாகக் கம்பன் விழாவைப் பெங்களூருவில் முதன்முதல் நடத்தியது இலக்கியத்தேன் சாரல் அமைப்பே. தொடர்ந்து சிலப்பதிகார விழா , சேக்கிழார் விழா, வள்ளலார் விழா, மகளிர் தின விழா, பாரதியார் தின விழா, வள்ளுவர் தின விழா, ஆசிரியர் தின விழா, சுதந்திரதின விழா, பொங்கல் விழா போன்ற பல்வேறு விழாக்களை நடத்தி அவற்றில் பல கருத்தரங்கங்களும், கவியரங்கங்களும், பட்டி மன்றங்களும் நடத்தி கவிஞர்களையும் பேச்சாளர்களையும் ஊக்குவித்தோம். இவை தவிர சிறுவர்களின் திறமைகளை ஊக்குவிக்கும் விதமாகச் சிறுவர் அரங்கங்கள் நடத்தியுள்ளோம்.

இணையத்தின் வழியாக 12 நிகழ்ச்சி உட்பட 22 நிகழ்ச்சிகள் நடத்தினோம். இனியும் தொடர்ந்து நடத்துவோம்.

கோவைக்கம்பன் கழகச் செயலாளர் திரு.நஞ்சுண்டன், புதுகைத் தென்றல் ஆசிரியர்.மு.தருமராசன் ,பேரா.பானுமதி தருமராசன்,ஓம் சக்தி இணை ஆசிரியர் பேரா. சிதம்பரநாதன், விஜயா பதிப்பகம் திரு.வேலாயுதம், கவிஞர் அமுத பாரதி ஆகியோருக்குத் தமிழ்ச் சான்றோர் விருது வழங்கி சிறப்புச் செய்தோம்.

அழகப்பா கலைக்கல்லூரி பேரா.பட்டிமன்ற பேச்சாளர் மா.சிதம்பரம்,கொங்குநாட்டு கலைஅறிவியல் கல்லூரித் தமிழ்த்துறை தலைவர் க.முருகேசன் ஆகியோர் உட்பட பேச்சாளர்கள் பலர் கலந்து கொண்டு சிறப்பித்தனர். பொதிகை செய்தி வாசிப்பாளர் விஜயகிருஷ்ணன் கவியரங்கத்திற்குத் தலைமையேற்று நடத்தியுள்ளார்.

இணையத்தில் நடந்த கம்பர் விழாவில் நகைச்சுவை நாயகர் சிற்சபேசன் தலைமை வகித்தார். வள்ளலார் விழாவிற்கு ஓம் சக்தி இணை ஆசிரியர் சிதம்பரநாதன் தலைமை வகித்தார்.

இணையத்தில் நடைபெற்ற நிகழ்வுகளில் சிங்கப்பூர், இங்கிலாந்து, அமெரிக்கா, அமீரகம் உட்பட பல்வேறு நாடுகளிலிருந்தும், பெங்களூர், ஹைதராபாத், மும்பை, கோவை, சென்னை, மதுரை போன்ற பல ஊர்களில் இருந்தும் கவிஞர்களும், பேச்சாளர்களும் பங்கேற்று, சிறப்பித்தனர்.

இது தவிர கோவை கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரி தமிழ்த் துறையும், விஜயா பதிப்பகமும், இலக்கியத் தேன் சாரலும் இணைந்து நாவலாசிரியர் ஜெய்சக்தி அவர்கள் நூறு புத்தகங்கள் எழுதியமைக்கான பாராட்டு விழா நடத்தினர்.

9/01/2021 அன்று நடைபெற்ற பொங்கல் விழாவில் கவிஞர்.அமுதபாண்டியன் தலைமையில் பொங்கலைப் போற்றுவோம் என்ற தலைப்பில் கவியரங்கம் நடைபெற்றது. அக்கவியரங்கக் கவிதைகள் உட்பட மேலும் பல கவிதைகள் சேர்த்து ஒரு பொங்கல் மலர் தயாரித்துள்ளோம்.

பொங்கல் மலருக்குத் தொகுப்பாசிரியராக இருந்து பேருதவி புரிந்த திரு.மதலை மணி அவர்களுக்கும், மலர் வெளியிட பெரிதும் ஊக்கமளித்த கவிஞர் தனம் வேளங்கண்ணி அவர்களுக்கும், நன்கொடை நல்கிய இனவெழுச்சிப் பாவலர் திரு.மகிழ்நன் அவர்களுக்கும், தொடர்ந்து இலக்கியத் தேன் சாரல் நிகழ்ச்சிகளுக்கு நன்கொடை நல்கி ஊக்குவித்த கவிமலர். மலர்மன்னன் அவர்களுக்கும், திரு. சந்திரகுமார் அவர்களுக்கும் இலக்கியத் தேன் சாரல் அமைப்பு தனது நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கிறது.

பல்வேறு கவிஞர்களின் கவிதைகளால் தொடுக்கப்பட்ட மாலையாகப் பொங்கல் மலர் உங்கள் கரங்களில் தவழ்கிறது. வாழ்த்துங்கள். வணங்குகின்றோம்.

இப்படிக்கு

**இலக்கியத் தேன் சாரல் குழுவினர்**




# கவிஞர் கே.ஜி. ராஜேந்திரபாபு

7892627066 ✦ பெங்களூரு




பொன்பட்(டு) உடுத்திப் புதுப்பானைப் பொங்கலிட்டு
மின்வெட்டே இல்லாத விண்நோக்கித் தன்குடும்ப
அங்கத்தி னர்சூழ ஆனந்த ராகமொடு
பொங்கலோ பொங்கலெனப் போற்று.

மருத நிலநெல்லை மண்பானை யிட்டுக்
கரும்புடன்கொண் டாடிக் களிப்போம் - விருப்பமுடன்
கொல்லேற்றைப் போயடக்கும் முல்லைநில ஆட்டமுண்டு
தொல்புகழ் பொங்கல்சீர் சொல்,

கழனி உழவனுக்கும் காளைமாட் டுக்கும்
கிழக்குக் கதிருக்கும் கீர்த்தி - வழங்கும் நாள்
செங்கரும்பு சாறுண்டு தித்திக்கும் வாயாலே
பொங்கல் எழில்நாளைப் போற்று.

பெய்யாத மாமழை பெய்ததுமுன் நாள்வரை
ஐயுற்றோம் தோன்றுவனோ ஆதவன்? - கைவிரித்து
நெய்வாசப் பொங்கலன்று நேராய் மலர்ந்தானே
வெய்யிலைப் பார்த்தோம்! வியப்பு!

வாசக்கால் போல்கரும்பு வைத்(து)அதன் மத்தியில்
பாசம்போல் பொங்கிவரும் பானையிட்டு - வாச
மலர்:காய் கறிபரப்பி மஞ்ச(ள்)இஞ்சி வைத்துக்
குலவையிட்டோம் பொங்கல் குறித்து.

கூனல் குணத்தைக் குறிஞ்சிமலை போல் நிமிர்த்தும்
ஞானத் திருக்குறளை நாளும்சொல் - வானளவு
ஞாலமே போற்றிடும் ஞாயிறன்ன வள்ளுவரைப்
பாலமுதப் பொங்கல்நாள் பாடு.






நாவலாசிரியர் ஜெய்சக்தி

7022617747 ✦ பெங்களூரு




போற்றுவோம் போற்றுவோம் பொங்கலைப் போற்றுவோம்!
மாற்றங்கள் தந்திடும் பொங்கலைப் போற்றுவோம்!
நாட்டுக்கும் வீட்டுக்கும் நலந்தரும் பொங்கலை!
நம்பிக்கை யோடுதான் நாமெலாம் போற்றுவோம்!
கூட்டு வாழ்க்கையைக் காட்டிடும் பொங்கலை
கூடியே போற்றுவோம் குலவையிட்டுப் போற்றுவோம்!
வேற்றோர் பகைவர் என்றெவரும் இலையென
விருப்புடன் தெளிவுடன் கொண்டாடி மகிழ்வோம்!

புத்தரிசி புதுமஞ்சள் கரும்போடு பானையிலே
பதமாகப் பொங்கலையே பொங்கவிட்டுப் பொங்குகையில்
கூத்தாடிக் குலவையிட்டுக் கொண்டாடி மகிழ்வோம்!
சுற்றங்கள் சொந்தங்கள் ஒருசேர நிற்போம்!
கீழ்த்திசையில் புறப்பட்டு மேற்றிசையில் மறைகின்ற
கதிரவனுக் கொருநாள் கணக்காக வழிபாடு
பாத்திரங்கள் நிறையவே பாலைச் சொரிந்திடும்
பசுவோடு கறவைக் கணங்களுக்கு ஒருநாள்!

இயற்கைக் கூறுகள் அவைகளே தெய்வம்
இசைந்து வாழ்ந்தால் என்றுமே நன்மை
செயற்கை வளர்ச்சிகள் எத்தனையோ இருந்தாலும்
இயற்கையாய் வாழ்தலே என்றும் இனிமை
அயராது உழைத்திடும் உழவரோடு இணைந்து
தாமும் உழைத்திடும் உயிர்வாழ் இனங்கள்
உயர்வைக் கூறிடும் பொங்கலைப் போற்றுவோம்
உள்ளத்தில் நன்றியைக் கொட்டியே போற்றுவோம்!





கவிஞர் அமரன்
9632099855 ✦ பெங்களூரு



தென்னாடு வடநாடு
எந்நாளும் பிரச்சினையிங்கே.... எனின்
இந்தியத் திருநாடு!
வேளாண் பிரதிநிதிகள்
நாலுபத்து ஒருநீதி... நானூறு
ஆளுவந்தால் ஒருநீதி!
பப்பத்துப் பேரெனினும்
அப்பப்போ தலைநீட்டுவர்.... ஆளுங்குழு
கட்டுக்குள் வைக்கணும்தான்!
ஊரெல்லாம் பேராச்சு -
பாராளும் ஜனநாயகம்.... யாரை
யாராள்வர், வினாக்குறி!

2. விடுவிடு....சாலைவிட்டு
நடு வீடு வந்தாச்சு.... எடுஎடு
செங்கரும்பு, பொங்கல்பானை!
கிழக்கேதான் செங்கோளம்
உதிக்குது இந்நாளும்... மஞ்சள்
மங்கலம் வழிபடுவம்!
கருவிக்கும் பெருங்கும்பிடு -
கன்று காலிகளுக்கும் நமதன்பு... பொங்கல்
பேர்சொல்லு, நாவினிக்க!



கவிஞர் C. ஹரீஷ் சின்னராஜ்
9880366127 ✦ பெங்களூரு



போற்றுவோம் போற்றுவோம் பொங்கலைப் போற்றுவோம்
சேற்றினில் கால் பதித்துச் செம்மைப்படுத்தி
நாற்று நட்டு நீர் பாய்ச்சி நலமுடனே
சோற்றுக்கு வழிவகை செய்யும் உழவனை
மாசில்லா மனத்துடன் நாம் போற்றிடுவோம்!
காசினியில் உழவன் இல்லை யென்றால்
கானகம் தானே இருந்திருக்கும் - அவனை
நேசமுடன் நாம் என்றும் வாழ்த்திடுவோம்!

கதிரினைப் போற்றுவோம் காளையைப் போற்றுவோம்
உறவினையும் பேணிப் போற்றி மகிழ்ந்திடுவோம்!
நீங்காத துயரமெல்லாம் நொடியினில் நீங்கிட
பாங்காக நாம் பொங்கலைப் போற்றுவோம்!
நித்தமும் தமிழரின் ஒற்றுமை ஓங்கிட
யுத்தமும் பேதமும் வாழ்வில் அகன்றிட
மொத்தமாய் மனிதரின் மனங்கள் மலர்ந்திட
சத்தமாய்க் கூடியே பொங்கலைப் போற்றுவோம்!

சாதியும் மதமும் அற்பச் சுரண்டல்களும்
நாதியற்றுப் போகவே பொங்கலைப் பொங்குவோம்!
ஆதித் தமிழனின் மீது ஆதிக்கம் ஒழியவே
ஆதித்தனை வேண்டியே பொங்கலைப் பொங்குவோம்!
அருகிலே வருகின்ற மனிதமும் நேயமும்
பெருகிப் பல்கவே பொங்கலைப் போற்றுவோம்!
தருமமும் நீதியும் தமிழும் தமிழரும்
பெருமையாய் வாழ்த்திடுவோம்! பொங்கலைப் போற்றுவோம்!





## கவிஞர் மதலை மணி

9480069341 ✦ பெங்களூரு



உழவையே தொழிலாய் ஊராரும் வியக்க
உயர்வெனப் புரிவார் தமிழர்கள் அன்றோ
கழனியிலே வேர்வை சிந்தியேஉழைப்பைக்
கண்மணியாய் நினைப்போர் அவர்போல் உண்டோ?

அக்காலம் தொட்டு இக்காலம் கூட
அமுதளிக்கும் உழவை மதித்தவர் தமிழரே!
தக்கதோர் வகையில் பயிர்களைப் போற்றிய
தரணியோர் வியக்க வைத்திடும் பொங்கலே

மஞ்சளும் எள்ளும் அச்சு வெல்லமும்
மாவிலையும் வாழையும் செங்கரும்பும் கொண்டு
இஞ்சியும் மாவிலைத் தோரணமுடன் தமிழர்
இன்பமுற கொண்டாடும் தமிழர் பொங்கலே!

இயற்கையைப் புகழ்ந்து ஏர்க்கலப்பைப் போற்றி
ஏற்றமுடன் மணியான நெல்லையும் குவித்து
வியந்திட்டே, ஊரையே அலங்கரித்தும்,மஞ்சு
விரட்டிலே காளையை வென்றிடும் பொங்கலே

ஊர்களுக்கே சென்று இருந்தாலும் தொடர்ந்து
ஓடிவந்து வாழ்த்தைப் பெரியோரிடம் பெற்றுப்
பார்சிறக்க கொண்டா டிடும்விழா,தமிழர்
பேர்பெற்ற,புத்தாடை அணிந்திடும் பொங்கலே

ஊரெல்லாம் இங்கு கொண்டாடிடும் பொங்கல்!
உணர்வுடன் கலைகள் இவ்விழாவில் சிறக்கப்
பாரெல்லாம் அறுவடை நாளென்றே மகிழும்
பைந்தமிழரின் பொங்கலைப் போற்றுவோம் வாரீரே!



கவிஞர் அமுத பாண்டியன்
9448201837 ✦ பெங்களூரு



பொங்கலைப் போற்றுதற்குத் - தமிழர்
தைத் திங்களையே தேர்வு செய்தார் - தமிழர்
தைத் திங்களிலே பொங்கல் வைத்துத் - தமிழர்
தைமகளையே வணங்கி நின்றார்!

வாசலிலே சாணமிட்டு பூசணி பூவைத்து
பூலாபூவுடனே நட்டமுட்டி வேர் சேர்த்து
மாவோடு வேப்பிலை தோரணமாய்
மஞ்சளும் குங்குமமுமாய் மாக்களுக்கு அதையிட்டு
கதிரோன் வரும்முன்னே காலையிலே பொங்கல் வைத்து
பொங்கிய பொங்கலோடு பாலோடு பழம்சேர்த்து
கட்டி வெல்லம் தான் பிசைந்து
பூசணி இலையினிலே படையலாய் அதைஇட்டு

ஆதவன் உதிக்கும்போது
ஆண்டுழைத்த கால்நடைகளுக்கும்
கறவை மாட்டுக்கும்
கும்பம் என்று சொல்லி கும்பிட்டுத் தாள்பணிந்து
படையலாய் அதற்கிட்ட பொங்கலினைக்
கால்நடைக்குத் தான் ஊட்டி மகிழ்ந்து
பழையன கழித்தலும் புதியன துதித்தலும்
போகியென்று பெயர் சூட்டி உழவன் மனமகிழ்ந்து
நன்றி சொல்லும் நாளே போகி நாளாகும்!

## பெரும் பொங்கல்

உழவுத் தொழிலுக்கும் உயிர் அணுக்கள் வாழ்விற்கும்
உதயசூரியனின் ஒளிக்கதிர்கள் வேண்டுமன்றோ
ஒளிக்கதிர்களை உமிழ்கின்ற உதயசூரியனுக்கே
நன்றி சொல்லும் நாளே சூரிய பொங்கல் பெரும் பொங்கல்
நாளாகும்!

## மாட்டுப் பொங்கல்

நிலத்தினிலே அடுப்புவெட்டி அதன்மீது கல்வைத்து
புதுப்பானை புத்தரிசி மஞ்சள் கிழங்குடனே மாக்கோலம்
மனம் மகிழ்ந்து பொங்கல் வைத்து பொங்கிவரும் போது
பொங்கலோ பொங்கல் என்று பொங்கிமனம் கூவிடுவோம்
பொங்கல் இட்ட அடுப்பு பின்னே
மாவிலை தோரணமாய் மாக்களுக்குப் பட்டிகட்டி
ஆடுமாடு அத்தனையும் ஆசைதீரக் குளிப்பாட்டி
உடல்எல்லாம் வண்ணமிட்டு மயில்தோகை கொம்பில்கட்டி
கழுத்துமுதல் கால்வரை மலர்களால் மாலையிட்டு
புதுமுறத்தில் பூசணி இலையில் படையல் இட்டு
அன்னமிடும் மண்ணுக்கும் உழைத்தளிக்கும் காளைக்கும்
வணங்கி மகிழ்ந்து பொங்கலிடும் நாளே
மாட்டுப் பொங்கலாகும்; பட்டி பொங்கல் எனவும் அழைப்பர்!

**காணும்பொங்கல்** உழவன் கன்னுபொங்கல் என்பான்
உற்றார் உறவுகளும் கற்றாரும் சிறாரும்
ஒன்று கூடி மகிழும் நாளே காணும் பொங்கலாகும்
முதல் நாள் வைத்த பொங்க அடுப்பினிலே
கன்னுக் பொங்கலுக்கோர். சிறு பானைவைத்துப்
'ானையிலே பொங்கவைத்து அந்தப் பொங்கலை
நேற்று போட்ட படையல் முன்னே புதுபடையலிட்டுப் படையல்முன்
இளம் கன்றொன்றைக் கடேரி என்று பெயர் அழைத்து
காளைகள் வம்சாவழி வளர கடேரிக்கு பொங்கல் படையல் இட்டுச்
சாணத்தால் பிடித்து வைத்த சிலையை
கடேரியின் காலால் மிதிக்க வைத்துப்
பொங்க அடுப்பினையும் தாண்டவைத்து
கால்நடைகள் வம்சாவழி வளர
உழவனவன் பொங்கலோ பொங்கல் எனக் கூவி
உற்றார் உறவினர்கள் ஒன்று கூடி மகிழும் நாளே
காணும் பொங்கல் என்பார் களிப்பூட்டும் பொங்கலைப் போற்றுவோம்!

*(இலக்கியத்தேன் சாரல் சார்பாக 9-1-2021 இணையவழியில் நடைபெற்ற பொங்கல்விழாவில் பாடிய தலைமைக்கவிதை).*



கவிமலர் வ. மலர்மன்னன்

9480336138 ✦ பெங்களூரு



மூத்தகுடி நாமென்னும் தொன்மை யோடு
மதிமுகமாய்த் தமிழ்தாயின் பெருமை நாடு!
ஏத்தும்படித் தமிழினமே ஒன்றாய்க் கூடு!
எந்தமிழ் உலகோர்க்குத் தாய்மை வீடு
கூத்தும்இசை யும்பாட்டும் முக்கனிச் சாறு!
கவினரும்காப் பியங்கள்நாம் பெற்றபேறு
பூத்துக்குலுங் கும்தமிழர் பண்பைக் கூறு
பகுத்தறிவும் சிந்தனையும் நம்வர லாறு!

செங்கரும்பும் செந்நெல்லும் விளைவளம் காட்டும்!
செய்கின்ற உழவுத்தொழில் மேன்மை நாட்டும்!
மங்கையரின் வளையலோசை மகிழ்வைக் கூட்டும்
மஞ்சள்முகம் கன்னியர்பால் பொலிவை ஈட்டும்!
கங்குலதன் மதிமுகமோ தண்மை நீட்டும்
கதிரவனின் ஒளிப்புனலோ உணர்வை மீட்கும்!
சங்கத்தமிழ் இலக்கியங்கள் சீரிளம் பாட்டும்!
சீர்புலத்தை வள்ளுவன்முப் பாலறங் கூட்டும்!

அன்புநிலம் விளைகாதல் உறவைப் பொங்கும்!
அறங்கூட்டும் வினைநலத்தால் மேன்மை யோங்கும்!
நுண்ணறிவுப் புலமோங்கின் ஆற்றல் ஊங்கும்!
நன்செய்பயிர் போல்பயனும் குன்றா தோங்கும்!
தன்னறிவும் பொதுமையிலே சமன்மைப் பொங்கின்
தன்னலமும் தாழ்வுமில்லா மனிதம் விஞ்சும்!
மன்னுகிற நேயமதில் உலகியல் பொங்கின்
மனிதக்குலம் ஒன்றென்னும் மெய்ம்மை எஞ்சும்!

மக்களாட்சி தத்துவத்துள் ஆளுமை தங்கின்
மக்களிடை பேதமில்லா ஒருமை பொங்கும்!
மக்களுமே சாதிமதம் கடந்து வாழின்
முயங்கிவரும் இயற்கையது ஓரிறை யாகும்!
ஒக்கல்சூழ் குடிமைதனில் வாழ்வு பொங்கின்
ஒப்புமைக்கும் உரிமைக்கும் ஏதம் இல்லை!
தக்காராய்ப் பகுத்துண்டு பல்லுயிர் ஓம்பின்
துன்பந்துயர் அற்றதோர் வாழ்வியலே பொங்கல்!



இனவெழுச்சிப் பாவலர்.நா.மகிழ்நன்
9591422662 ✦ பெங்களூரு



பவழநிறச் செவ்விதழில் நகையைப் பின்னிப்;
பார்விரித்த இயலசைவில் எழிலாய் வந்து
தவழுமிளங் குழவிதளிர் மேனி மென்மை
தழுவியணைத் தாடுமின்பம் போன்று; நெஞ்சம்
உவந்தாடும் தைப்பொங்கல் நாளில், தாயின்
உளத்தன்பாய் என்னினத்தைப் போற்றி வாழ்த்த
குவலயத்தின் மூத்தவளாம் தையவள் நீயே
தமிழினத்தை நன்மொழியால் வாழ்த்து வாயே!

ஒவ்வாத பிரிவாலே ஒடிந்து நாளும்
ஒருங்கிணைந்து வாழ்வதற்குச் சிந்தை தேக்கார்
செவ்வியலாய்த் தம்வாழ்வைச் செப்ப மாக்க
செந்தமிழே தைமகளே எம்மை வாழ்த்த
அவ்வான இளங்காலை ஒளியின் தூரல்
அழகாக வாழ்த்துப்பாடு பொங்கல் வாழ்த்து!
எவ்வினையும் நல்வினையாய்த் தமிழர் வாழ்வில்
எழில்விளக்காய்ப் பொங்கட்டும் பொங்கல் வாழ்த்து!

தீதொழிந்து தீயர்தம் செயலொ ழிந்து
திரளும்உட் பகைகளைந்து உண்மை என்னும்
தேன்பொழிந்து உறவைமுறிக் குமிரண் டமுக்காம்
தெருகுப்பைக் கூட்டியெரி யூட்டி,அந்த
வான்பொழியும் நிலவழகாய் வேளாண் வாழ்வை
வளைவிலாநேர் நிமிர்த்தியவர் வளத்தைக் கூட்ட
தேன்மொழியே, தென்பாவாய்த் தைத்தாய்ப் பூவே
வாழ்த்துக்கள் வழங்கிடுவாய், பொங்கல் வாழ்த்து!

இரண்டமுக்காம் = சாதி, மதம்



டாக்டர். பேரா. கோவிந்தராசு

7483574519 ✦ பெங்களூரு



மண்ணுலகை வாழவைக்கும் மாண்பான உழவுதனை
மகிழுடனே ஏற்பதாலே மாரியாய் உயர்ந்துள்ளான்!
எண்ணறிய சான்றோர்க்கும் தன்னுழைப்பைத் தான்நல்க
எல்லோர்க்கும் ஏணியாகிப் பயனளித்தே வாழ்கின்றான்!
பண்புமிக்க செயல்புரிந்தே தன்சேயாம் நிலம்தனைப்
பாசமுடன் பார்த்துப் பயனளித்து நிலைத்துள்ளான்!
விண்ணுலகும் வியந்திடவே வெகுமதியாம் பயன்தனையே
வெற்றியுடன் பகிர்ந்தளித்து பாரியாய்க் காண்கின்றான்!

ஒருமையுடன் உழைத்து மன்னுலகோர் மகிழ்ந்திடவே
ஓடியாடித் தன்தொழிலாம் உழவுதனை ஆற்றுகின்றான்!
அருமைமிகு ஆற்றல்கொண்டு அனைத்துலகும் வாழ்ந்திடவே
ஆறாய்ப் பயன்தந்து பாரோர்க்காய் உழைக்கின்றான்!
கருமைகொண்ட மனத்தோர்க்கும் கனிவான நலம்தந்தே
காட்சிக்கு எளியனாகிக் குவலயத்தில் வாழுகின்றான்!
பெருமைதான் தந்தாலும் பேருக்காய் வாழாமல்
பேருலகோர் நலத்திற்காய் நாளெல்லாம் வாடுகின்றான்!

ஓடியுழைக்கும் உழவனின் கையுயர வேண்டும்!
ஒற்றுமையாய் வாழ்ந்திடவும் உழவன்துணை வேண்டும்!
தேடியதைப் பொதுவிற்காய்ப் பகிர்ந்தளிக்க வேண்டும்!
தேனாய்ப் பயனளிப்போர் மனம்மகிழல் வேண்டும்!
ஆடிப்பாடி உழைப்போர் நிலையுயர வேண்டும்!
அழகான தமிழில் அவனுழைப்பைப் பாடவேண்டும்!
வாடாத நிலைகொண்ட வண்ணமலர் மாலையிட்டு
வாழ்த்தி உழவுப் பொங்கலைப் போற்றுவோம்!

தைமுதல் வந்திட்டால் தையலுடன் தான்சென்றே
தன்நிலத்து நெல்லினையே ஆவலுடன் அறுத்திடுவான்!
கைமுதல் பெற்றிட்டால் பேருவகை அடைந்திடுவான்!
காலமெலாம் வாழ்ந்திடவே சேர்த்தும் வைத்திடுவான்!
பெய்மழையாய்ப் பயன்தந்து பாரோர்க்காய் உழைத்திடுவான்!
பேருலகோர் நலம்பெறவே பெற்றதையே நல்கிடுவான்!
வையத்தார் அவனுழைப்பைப் போற்றியே புகழவேண்டும்!
வானுலகும் வாழ்த்தப் பொங்கலிட்டுப் போற்றவேண்டும்!



இனமானக் கவிஞர் தனம் வேளாங்கண்ணி

9886199604 ✦ பெங்களூரு



கார் முகிலோன் கண்திறந்து
வான் வெடித்து நீர் வீழ்ந்தால்
காடு மலை கானகம் பூக்கும்!
வையம் வாழும் வாழ்வும் சிறக்கும்!

தைமகள் உலகிற்குப் புதியவள் அல்லள்!
காட்டாறு ஓடிகடல் கலக்கும் முன்னமே
ஊற்றாகி மண்ணில் மறைந்திருந்தவள்! - அவளைச்
சேறாகக் கண்டெடுத்த அறிஞன் உழவன்

அரசியானாலும் பசிக்கு அரிசி வேண்டும்!
கண்கண்ட கடவுள் உழவனே ஆகும்!
கருணை இவன் மனதைக் கோவில் ஆக்கும்!
உணவு தருவதில் இவன் பிரம்மனாகும்!

விஞ்ஞானம் வேற்றுக் கிரகத்தை நாடும்!
விவசாயம் நாற்றுக்குத் தண்ணீர்த் தேடும்!
நகரத்தை நோக்கி இவனும் நகர்ந்தால்
நாடு நலங்கெடும் உணவுக்குக் கையேந்தும்

இல்லாதது யேதுமில்லை இந்த நாட்டில்
இயங்குவரின் கழுத்தை இறுக்குகிறது ஆட்சி!
தேசிய ஒருமைப் பாடென்று பேசி
பிரிவினை வளர்ப்பதே இன்றைய காட்சி!

பாரதம் விவசாய தேசம் என்றனர்!
நாரதக் கூட்டம் அதைக் கெடுத்துவிட்டனர்!
நெல்வயல்களை பொன்கொண்டோர்க்கு விற்றனர்!
பொறுமை இழந்த விவசாயி தெருவில் நின்றனர்!

உழவனின் தலையாய பெருநாள் தைத்திருநாள்!
உழைப்பின் வியர்வை உலகறியும் நன்நாள்!
இதயங்கள் இன்புற்று மகிழும் பெருநாள்!
இல்லங்களில் இனிக்கட்டும் வள்ளுவப் பொங்கல்!



கவிஞர் கர்னல் மு. குமார்
9448307862 ✦ பெங்களூரு



பருவங்கள் மாறும்போது பண்டிகைகள் வந்துவிடும்!
புருவங்கள் உயரவைக்கும் பண்பாட்டை நினைவூட்டும்!
தைப்பொங்கல் எனும்போது தமிழுணர்வு வந்துவிடும்!
தழைத்தோங்கி வாழ்வென்னும் தனியுறுதி வாய்த்துவிடும்!

இல்லமது சுத்தமானால் செல்வம்வந்து சேர்ந்துவிடும்!
உள்ளமது சுத்தமானால் ஞானமது தேடிவரும்!
பழசானதும் பழுதானதும் பார்வைக்கு ஊறுதரும்!
பழையதையே நினைத்திருந்தால் பாதையிலே முள்ளாகும்!

வாசலிலே கோலமிட்டு வகைவகையாய் அலங்காரம்
சாணத்தில் தரைமெழுகிச் சலிக்காமல் மாக்கோலம்!
பனங்கீற்று மாவிலையில் படைக்குமிடம் தோரணம்
புதுமஞ்சள் வாழையோடு கரும்புதரும் உற்சாகம்!

குலதெய்வம் அருளென்றும் குன்றாமல் கிடைப்பதற்குக்
குலப்பெண்கள் ஏற்றிவைப்பர் நெய்விட்ட குலவிளக்கு!
புதுப்பானை புத்தரிசி பொங்கிவரும் பொங்கலது
பகலவன் ஞாயிறுக்கு நன்றிகூறும் படையலது

நாள்தோறும் மறுக்காமல் பால்ஈனும் பசுவதனை
நன்றாக அலங்கரித்து நடுவீட்டில் வணங்கிடுவர்!
காளையோடு விளையாட காளையர்கள் தயாராவர்
காளைபூட்டி வண்டியோட்டும் போட்டிகளும் வைத்திடுவர்!

கன்னியர்கள் வெளிவந்து களிப்புடனே நடமாட்டம்
காதலுக்கு மறைமுகமாய் வாய்த்துவிடும் சந்தர்ப்பம்!
ஆசிகளும் காசுகளும் அள்ளித்தரும் முதியோர்கள்
அதற்கென்றே அவர்தாளைப் பணிந்துவிடும் இளையோர்கள்!

எல்லோரின் வாழ்வுதன்னை ஏற்றமுறச் செய்வதும்தான்
பண்டிகைகள் கொண்டாடும் பலநோக்கில் ஒன்றாகும்
சேர்த்த பணத்தைச் செலவுகள் செய்தால்தான்
ஏழையாய் இருப்போரின் தேவைகள் நிறைவேறும்

சிக்கனம் பாராமல் சோம்பலும் பாராமல்
பண்டிகைகள் கொண்டாடி பண்பாடு காத்திடுவோம்!
பண்டிகைகள் மறைந்துவிட்டால் பண்பாடு மறைந்துவிடும்!
பண்பாடு மறைந்துவிட்டால் தலைமுறைகள் தவித்து விடும்!



பொற்கிழிப்பாவலர் கா உ கிருட்டிணமூர்த்தி
9900156721 ✦ பெங்களூரு



நாவலந் தீவெல்லாம்
நல்ல சங்க ராந்தியென்று
ஆவலாய்க் கொண்டாடும் ஒருநாள்..ஆனால்
அருமைத் தமிழருக்கோ பலநாள்

செங்கதிரோன் செய்துநின்ற
செம்மைமிகு திருப்பணிக்குப்
பொங்கலோ பொங்கலென்று சொல்லி.. நன்றி
பூரிப்போ(டு) ஆர்ப்பரிப்பார் துள்ளி!

முட்டாத மாடுகளை
முழுமையாய் அலங்கரித்துக்
கிட்டாத பெருமையெல்லாம் கிட்ட..-அவற்றின்
கீர்த்திசொல்வார் எண்டிசையும் எட்ட!

வள்ளுவரை உள்ளிபல
தெள்ளுதமிழ்ப் புலவருக்கு
நல்லபல அன்புரைகள்கூறி...அவர்க்கு
நலம்செய்வார் விருதுமலர் தூவி!

காணாத காட்சியெல்லாம்
கண்டு களிப்பதற்கு
ஆணோடு பெண்ணெனவே இணைந்து..செல்வர்
அங்குமிங்கும் மகிழ்ச்சியாய்ப் பிணைந்து!

ஆகிவராப் பொருளையெல்லாம்
ஆராய்ந்து தேர்ந்தெடுத்து
போகியென்று பேரதற்குச் சூட்டி..சுட்டுப்
பொசுக்குவார் தீயதனை மூட்டி!

தாரணியெல்லாம் வாழும்
தமிழ்கூறும் நல்லுலகோர்
ஓரணியாய்த் திரள வைக்கும்திருநாள்..இதுவே
ஒற்றுமைக்குச் சான்றாகும் பெருநாள்!

இந்த நாள் போலவே
எந்த நாளும் தமிழர்
சொந்தமென பந்தமென வாழ்க...அவர்
சுற்றமும் நட்பும்நலம் சூழ்க!





கவிஞர் வே.அரசு,
9740322005 ✦ பெங்களூரு



நல்லமழை வேண்டும் எனப் போற்றி
நாடெல்லாம் செழிக்கட்டும் எனப் போற்றி
மண்ணில் வளம் சேரட்டும் எனப் போற்றி
மாடல்ல மற்ற அவை எனப் போற்றி

பகலவன் நாளும் ஒளிர வேண்டும்!
பார்முழுதும் இரவு பகல் தொடர வேண்டும்!
ஏர்முனைக்கு ஓய்வில்லா நாளும் வேண்டும்!
எங்கும் வேளாண்மை செழிக்க வேண்டும்!

சங்ககாலப் பொங்கல்காலம் நாலேழு நாளாம்!
இந்தக்காலப் பொங்கல்காலம் மூன்றே நாளாம்!
எந்தக்காலம் எவ்வளவுநாள் இருந்தாலென்ன!
எப்படியும் மகிழ்ச்சி வந்தால் சிறப்பு தானே!

நோய்நீங்கி நலம் ஓங்கி நாடும் வளமாகி
நண்பர்கள் சுற்றமுடன் பொங்கலைக் கொண்டாடி
புத்தாண்டில் பொங்கலைப் பூரித்துப் போற்றிடுவோம்!
சத்தான வாழ்வமைய சகலரையும் வாழ்த்திடுவோம்!





பைந்தமிழ்ப் பாவலர் **லோகநாதன்**

9341962072 ✦ பெங்களூரு



மழைநீராம் உழவர்க்கு மகத்தாமே என்றும்,
மழைபெரிதாய் அழிக்கவரும் மாமழையும் இலாது,
தழைத்தோங்க பயிர்களுக்குத் தக்கமழை வேண்டும்
தழைத்தெண்ணம் போலவேதான் தரவேண்டும் மழையும்!

வெஞ்சுடரும் பயிர்க்குதவி வேண்டியாங்கு அளிக்க
வெற்றிடமாய் எங்குமேதான் வேண்டாதது நீக்க
மிஞ்சுவார் விளைச்சலிலே முழுமையாக அதனால்
மிகையாகவே பங்களித்தால் மனங்குளிரப் பொங்கும்!

ஆண்டுதோறும் புத்தாண்டு அறுவடையும் செழித்து
ஆங்குநாமும் உழவர்தாம் அரியபலன் கண்டு
பூண்டிடுவோம் புத்தாடை புன்னகையும் சேர்த்து
புகழ்பாடி நன்றியுரை பூங்கதிரோன் சேவை!

ஆதிமனிதன் தமிழனவன் அருந்தமிழ் மொழியாம்
அதனையோது உலகுகண்டு அமைதியாக நோக்க
பீதியில் வாழ்ந்தோன் பேதையவ னல்லன்
பிறந்ததற்கு தமிழனாய் பீடுகொண்டு நடந்தே!

ஆண்டுதோறும் தைமுதல்நாள் அருந்தமிழர் திருநாள்
ஆண்டுதமிழர் நன்றியோடு அருணனை வணங்க
வேண்டியதை நூலாக விழாயதில் இட்டு
வியக்கவே இலக்கியமும் வித்தகமும் பொங்கும்!

பாவலரும் பல்லோரும் படைப்பினையே இணைத்து
பாகுபோல் கவிதைகளைத் படிப்பனையாய் ஆக்கி
நூலாக உருகொண்ட நல்லநல்ல கருத்தும்
நூறாதப் பைந்தமிழர் நூல்வளந்தான் பொங்கும்!




## இறையடியான்

சாகித்திய அகாதெமி விருதாளர் ✦ 9341209674




உழவர் திருநாளில் தமிழுண்டு மகிழ்ந்தோம்
உழாஅர் உழவர் என்றார் வள்ளுவர்
உழுதார் உலகோர் பசியகற்ற
அழுநிலையில் அவரின்று உழன்றார்

எழுக கீழ்த்திசை கதிரவனெனப் பாடிட
வழுவிலாது வருகை புரிந்தான் பகலவன்
வளிமண்டலத்து பிளவால்
அழிவுக்கு வழிவகுத்தார் வல்லரசார்

நிலம் நீர் காத்தநாள் பறிமுதலானதுவே
அவமின்று சூழ்ந்திடவே மண்ணும் கெட்டதுவே
செயற்கை உரமின்று கொட்டியதால்
பயனற்றுப் போனதுவே பொன்விளைந்த பூமி!

மறப்போம் மன்னிப்போம் என வாழ்ந்து விட்டோம்!
அறப்போர் தனில் அமைதி காத்து,
எந்தமிழரின் ஏற்றமிகு பண்பாட்டின்
பைந்தமிழரின் பொங்கலைப் போற்றுவோம்!



கவிஞர் கண்ணதாச தாசன்
9742976158 ✦ பெங்களூரு



விதைகளின் கால்களை நம்பிடும் மரம்செடி கிளைகளை ஆட்டிடுதோ?
தமிழச்சி முகத்தினை சிவப்புடன் மஞ்சளாய் மேகங்கள் காட்டிடுதோ?
காளையின் கொம்பிலே அசைத்திடும் மணிகளும் இசையினைக் கூட்டிடுதோ?
கலப்பையில் உழவர்கள் எழுதிடும் கவிதைகள் பசியினை ஓட்டிடுதோ?

உழவரின் வியர்வைத் துளிகளைப் போலவே மழைநீர் கொட்டிடுதோ?
பனைமரம் போலவே வளர்ந்துள்ள கரும்புகள் நுங்கினைத் தட்டிடுதோ?
இளைஞரைத் தொட்டிடப் பயந்திடும் காளைகள் தரையினைத் முட்டிடுதோ?
கரும்பதன் தோகைபோல் நீண்டிடும் கதிர்க்கரம் பொங்கலைத் தொட்டிடுதோ?

நெற்குத்திப் பாடிடும் கிழவியின் குரலினைக் குயில்களும் கேட்டிடுதோ?
பெண்களின் எழிலினை நோக்கிட இளமுயல் தலையினை நீட்டிடுதோ?
சிறுமிகள் தீட்டிய கோலமும் எழில்பெற மதிஒளி ஊட்டிடுதோ?
கறுப்பண்ண சாமிக்கு சம்பங்கி மரங்களும் மலர்களைச் சூட்டிடுதோ?

யாதுமே ஊரென்று யாவரும் உறவென்று அன்புடன் நோக்கிடுவோம்!
ஒன்றுக்கும் பயனில்லா பொருளையும் எழுத்தையும் தீயினில் போக்கிடுவோம்!
வயலினை உழுதிடும் எருதையும் வீட்டினில் ஒருவராய்க் காத்திடுவோம்!
யாம்பெறும் இன்பத்தை உலகிது பெறும் என நாம் இனி பூத்திடுவோம்!

உலகத்தின் படத்திலே கலப்பையை வரைந்தே வானத்தில் ஏற்றிடுவோம்!
உழவர்கள் என்றதும் எளியவர் என்றிடும் நிலைமையை மாற்றிடுவோம்!
உழவர்கள் இல்லையேல் மனிதர்கள் இல்லையென கவிதைகள் சாற்றிடுவோம்!
உழைத்திடும் உழவர்கள் களித்திடும் திருநாள் பொங்கலைப் போற்றிடுவோம்!



பொற்கிழிப் பாவலர். வே.கல்யாணகுமார்.
9880934087 ✦ பெங்களூரு



போற்றுவோம்! போற்றுவோம்! பொங்கலினைப் போற்றுவோம்!
புதிய ஆண்டு பிறந்ததென..பொற்கதிரைப்போற்றுவோம்!

ஆற்றங்கரை ஓரத்திலே நாற்றசைய அறுவடைக்கே..
ஏற்றம்மிகு உழவர்வந்தார் இளங்கதிரைப் போற்றுவோம்!

மார்கழியின் பனிமழையில் ஓர்இரவின் விடியலிலே..
சீர்மிகுந்த ஏர்உழவர் பேருழைப்பைப் போற்றுவோம்!

புதுப்பானை அடுப்பில்வைத்துப் புத்தரிசி பொங்கவிட்டுப்
புத்தாடை சரசரக்க..பூமியெங்கும் பொங்கல்வைப்போம்!

காராம்பசு.. காளைகளைக் கருத்துடனே அலங்கரித்து
கணுக்கணுவாய் மஞ்சள்கட்டி நன்றியிலே பொங்கலிடுவோம்!
கல்லாமை இல்லாமை போகியிலே பொசுக்கிவிட்டு
உள்ளமெனும் ஆலயத்தில் உவகையினால் பொங்கலிடுவோம்!

குப்பனுக்கும் முத்தனுக்கும் கோடித்தெரு ஏழையர்க்கும்
புத்தாடை அணிவித்துப் சமத்துவத்துப் பொங்கலிடுவோம்!

பகலவன்முன் பொங்கலிட்டுப் படைப்பவனே உழவன்என்று
சகலருக்கும் தமிழினத்தின் அறத்துப்பால் பொங்கலிடுவோம்.!

.அக்கம்பக்கம் உள்ளவர்க்கும் ஆடுமாடு உயிர்களுக்கும்
சொக்கப்பானை வைத்துவிட்டு சுவையான பொங்கலிடுவோம்!



பொற்கிழிப் பாவலர். தேன்மொழியன்
9900458494 ✦ பெங்களூரு



பாலூற்றி வைத்திடுவோம்
பாசப்பொங்கல்
நெய்யூற்றி வைத்திடுவோம்
நேசப்பொங்கல்

அரிசியிலே வைத்திடுவோம்
அன்புப் பொங்கல்
படையலிட்டு வைத்திடுவோம்
பண்புப் பொங்கல்

வெல்லமிட்டு வைத்திடுவோம்
வீரப் பொங்கல்
கள்ளமிலாது வைத்திடுவோம்
கருணைப் பொங்கல்

சந்தியிலே வைத்திடுவோம்
சமத்துவப் பொங்கல்
மஞ்சளிட்டு வணங்கிடுவோம்
மகத்துவப் பொங்கல்

உழவருக்கு வைத்திடுவோம்
உயர்வுப் பொங்கல்
நிலம்செழிக்க வைத்திடுவோம்
நேர்த்திப் பொங்கல்

இயற்கைக்கு வைத்திடுவோம்
இன்பப் பொங்கல்
வளம்யாவும் பெற்றிடவே
வைப்போம் பொங்கல்!





## கவிச்செல்வர் இரா. லாலாலஜபதி

948332842 ✦ சென்னை



அறிவில் ஒளிருகின்ற அழகுத்தமிழ் மரபில்
அகத்தைத் துலக்கிநலம் பொங்குவோம்! - பிணி
அனைத்தும் அகல வேண்டிப்பொங்குவோம்! -உளம்
ஆற்றலோடவே மாற்று நோக்கிடும்
ஏற்புகொண்டொளிர் நோற்பு தன்னிலே
அகமகிழ்ச்சி மலரபொங்குவோம்! - இனி
அனைத்தும் துலங்குமெனப் பொங்குவோம்!

உறவில் வளரவிக்கும் உயர்ந்த குறள்வழியில்
ஒளிரும் அருளமுதைப் பொங்குவோம்! - புதுமை
ஒளிரஉயர் அறிவைப் பொங்குவோம்! - எல்லாம்
ஒன்று என்றிடும் உண்மை நெஞ்சுடன்
என்றும் நல்லதேஎங்கும் பொங்கிடும்
உணர்வில்இனியபொங்கல் பொங்குவோம்! - உயர்
நினைவில் கடைக்கணித்தல் பொங்குவோம்!

முறைசெய்வழியுடைய அறிவில் உயர்ந்தொளிரும்
மதிமைமிகுந்த பொங்கல் பொங்குவோம்! - எழு
கதிரை வணங்கிவளம் பொங்குவோம்! - என்றும்
மேன்மை நல்கிடும்வானாய் ஓங்கிடும்
தன்மையோட வேஞானம் தந்திடும்
மகிழ்ச்சிவினை தன்னைப் பொங்குவோம்! - தூய
அகப்புடனே அன்பைப் பொங்குவோம்!

( கடைக்கணித்தல் - அருளல் . மகிழ்ச்சிவினை - புண்ணியம் )





கவிஞர் ஜெயா வெங்கட்ராமன்
9900476704 ✦ பெங்களூரு



மாயனார் செய்த மட்குடம்
மனித உடல் என்கிறார் ஒரு சித்தர் !
மண்ணிலிருந்து உருவானவன்
மனிதன் என்கிறது விவிலியம்.!
மண் இல்லாமல் மனிதனில்லை
மண் ஐம்பெரும் பூதங்களில் ஒன்று.
மண்ணில் பஞ்ச பூதங்களின் துணையோடு
மனிதகுலத்திற்கு உணவை உருவாக்குகிறான் உழவன்.!

கடவுளுக்கு அடுத்து சேற்றிலே உழன்று
உண்டியையும் உயிரையும் கொடுக்கும்
கண்கண்ட தெய்வம் உழவன்!
அவன் விளைவிக்காமல் இருந்துவிட்டால்
உயிர்கள் வாழ்வதேது? அவனது தொண்டைப் போற்று
ஒரு திருநாள் உழவர் திருநாள்!
உலகம் முழுவதும் நன்றிக்கடன் செலுத்தவேண்டிய
திருநாள் உழவர் திருநாள் பொங்கல்!
ஆறறிவு படைத்த அவனுக்கு உறுதுணையாக
ஐந்தறிவு படைத்த கால்நடை, மாடு!
அதற்கும் ஒரு பொங்கல் மாட்டுப் பொங்கல்!

புத்தரிசி, கன்னல், வெல்லத்துடன் மஞ்சளையும்
சேர்த்து மங்கலகரமாக ஆதவனுக்குப்
படையலிடும்நாள் பொங்கல் திருநாள்!
உழவன் வாழ்ந்தால் மட்டுமே நாம் உயிர் வாழ்வோம்
இந்த நினைவை நினைவகற்றாதீர்!
பொங்கட்டும் வளம்கொழிக்க புத்தரிசிப் பொங்கல்



கவிஞர் ஜெயரமணி

9042243306 ✦ பெங்களூரு



ஏரின் சுழலின்றி  இவ்வையகம் சுழலுமா?
ஏரியின் வளமின்றி பயிரும் செழிக்குமா?
உழவரின் உழைப்பின்றி மாந்தர்
உயிர் வாழமுடியுமா?

திருவள்ளுவரின் திருமறையும் தெள்ளத் தெளிவாய்
உழுதுண்டு வாழ்வாரே  வாழ்வார் மற்றெல்லாம்
தொழுதுண்டு செல்வர் அவரின் பின்னே!!
சத்தியமான உண்மை!!நித்தியமான உண்மை!

கருக்கலிலே விழித்தெழுந்து
கலப்பையைத் தோளில் சுமந்து,
ஏரையும் மாடுகளையும் கூட்டிக் கொண்டு,
வயலுக்குப் போகும் உழவன் உழைப்பே
பசுமைப் பயிராகும்!

புதுநெல்லையும்  பக்குவமாய் அரிசியாக்கி,
இணைந்து உழைத்த துணையாளுடன்
புத்தரிசி அச்சு வெல்லம் சேர்த்து பக்தியுடன்
புதுப்பானையில் பொங்கிய பொங்கல்!

பரிதியினைத் தொழுது நிலமங்கை மடிவணங்கி
பாடி மக்களுடன் கொண்டாடுவோம்
பொங்கலோ பொங்கலெனப் பூரிக்கும் நாளில்!

உழைப்பாளிகள் துன்பம் அழியவும்
உரிமைகள் காத்திடவும்
ஆண்டவனைத் துதித்துப் பாடிப் பணிவோம்!

எங்கள் தமிழரின் மங்காப்புகழ் பாடும் திருநாளாம்!
பொங்கலோ பொங்கல்.!! எங்கும் ஒலிக்கட்டும்





முனைவர் வி. சரளா ஆறுமுகம்

9880827476 ✦ பெங்களூரு



நெல்வளம்....
நாட்டின் செழிப்பு - என
மக்களின் மன மகிழ்ச்சியும்
உலகத்தின் ஆனந்தமாய்
உலகத்திலும் இல்லத்திலும்
இனிக்கும் பொங்கும் எனும் பொங்கலோ!
பஞ்ச பூதத்தின் அடையாள அழகோ!
நோய் தீர்க்கும் ஆதவனை அணைந்தே
வரும் இனிய இளம் பொங்கலே!
உழவனின் ஊக்க ஊங்கியே!
சூரியனுக்கு விழா என்றாலும்,
விளைச்சலின் மதிப்பை ஊட்டும் உரமே!
சுயம்பு மொழியோடு சொந்தமான - என்றும்
உழவனின் உழைப்பின் அடையாளமே!
அரசன் முதல் ஆண்டி வரை
ஆண்டவன் முதல் அடியவர் முடிய
தொழும் தூய துறைத் தாளமே!
உணவின் சிறப்பிடத்தின் முதலே!
இளங்கதிர் அணைக்க.
இனிமையான அத்துணையும் இனம் சேர
இகம்பரம் அகம்பரத்தின் அச்சாணியாய்
உலக உற்பத்தியில் முதல் உறவாக
உயிரினத்தின் உற்சாகம் நீயே - எனப்
பொங்கலைப் போற்றுவோம்
புதுமை பூத்திட என்றும்....



கவிஞர் ர. தேன்மொழி
9448858200 ✦ பெங்களூரு



மார்கழி நிறைவுறும் போகியில்
மனைகள் சுத்தம் செய்து
கழித்தவைகள் தீயிலேற்றி...
போகியோ போச்சு போகியோ போச்செனும்
உற்சாகக் குரலில் அக்காலச் சிறுவர்கள்...!

வெயிலோனின் வீரியத்தை விதைகளாக்கி
மாரியவள் கருணை மண்ணில் தாங்கி
வேர் விட்டு விளைந்திடும் பயிர் வகைகள்
காடுவிட்டு வீடு சேர்ந்த களிப்புடன்..!

புத்தரிசி வெல்லத்துடன் செங்கரும்பும்
மண் குடத்தை அலங்கரிக்கும் மஞ்சள் கொத்தும்
பூசணிப் பூவுடன் வண்ணக் கோலம்
புத்தாடை வாசமும் ..பகலவன் படையலில் பக்தியுடன்...!

மனிதர்க்குத் தோள் கொடுத்த எருதுகள்
உயிர் வளர்க்க பால் கொடுத்த ஆநிரைகள்
அலங்காரம் பல செய்து அழகு பார்த்து
ஆனந்தம் கொள்ளும் திருநாளாய்..!

ஏறு தழுவி வெற்றி பெற்ற பெண்ணவளைத்
தன்னவளாய் மனம் மகிழ்ந்து பெற்றுக் கொண்டு
தாவிக் குதித்த சிங்கக் காளைகள்
தமிழகத்தில் ஏராள காட்சி கண்டோம்...!

இத்தனையும் இன்னமும் தொடர்ந்திட்டால்
இன்பமாய் மாறிடும் தைப்பொங்கல்!

பரிணாம வளர்ச்சியின் பாதிப்பில்
பண்டிகைகள் பாரம்பரியம் தொலைத்திடாமல்
போற்றியே வணங்குவோம் பொங்கலை
புகழ்த் தமிழர் திருநாளாய்...!





கவிஞர் நாகம்மாள்
8217335536 ✦ பெங்களூரு



தை மகளே வருக!தை மகளே வருக!
தாய்த்தமிழைப் போலெங்கள்
வாழ்வெங்கும் நிறைக!

வீட்டுக்கு வெள்ளையடித்து,
பழையன கழித்து புதியன புகுத்தி,
வரவேற்போம் தை மகளே!வருக!

தன்னிகரில்லாத் தைமுதல் நாளில்
ஒளிதரும் கதிரவனுக்கு நன்றி கூறும் திருநாளாய்
வண்ணக் கோலமிட்டு, புதுப்பானைப் பொங்கலிட்டு
செங்கரும்பு மஞ்சள் இஞ்சி படையலிட்டு
உறவுகளோடு ஒன்றிணைந்து உளம் மகிழ உண்போம்!

இனிமை பெருகிடும் இரண்டாம் நாளில்
உழவுக்கு உதவும் கால்நடைகளைக்
குழந்தைகளாய்க் குளிப்பாட்டி, கொம்புகளைக் கூராக்கி
வண்ணம் தீட்டி அழகாய் அலங்கரித்துப்
பொங்கலிட்டு ஊட்டிவிட்டு உயிர் மகிழ்வோம்!

காளையர்கள் காளைகளை அடக்கி
வெற்றி வாகை சூடும் நாள்!
இயற்கைக்கும் உழவுக்கும் உயிர்வரையில் நன்றி கூறி
ஊருறவோடு கொண்டாடும் திருநாள்!
தமிழுக்கும் தமிழருக்கும் பெருமை சேர்க்கும் பெருநாள்!




கவிஞர் ரமணிபாலசாமி

8792673064 ✦ பெங்களூரு




பொங்கலைப்போற்றுவோம்

வானமெனும் வீதியிலே
கதிரவன் தான் உதிக்கையிலே
பொங்கல் திருநாளாம் தை
தமிழர் பெரு நாளாம்
வாசலில் சாணம் நீர்போட்டு
அரிசி மாவில் கோலமிட்டு
செங்காவி கோடு போட்டு
பூவும் பொட்டும் வைத்து
பாங்காய் கல் அமைத்து
புதுப்பானை மஞ்சள் கட்டி
புத்தரிசி புது வெல்லம்
பொங்கி வரும் வேளை
பொங்கலோ பொங்கல் என்றும்
குலவை போட்டு வாழ்த்துப்பாடி
தலை வாழையிலை போட்டுப்
பூபழம் தேங்காய் வைத்து
முழு கரும்பு சாத்தி
தீப தூபம் காட்டி
இனிதே ஆரத்தி பாடி
உதயசூரியனுக்கு நன்றிகூறி
என்றும் பொங்கலைப் போற்றுவோம்!
ஒன்றாய் பொங்கலைப் போற்றுவோம்!



கவிஞர் எஸ்.வி.ஆர்.மூர்த்தி
9611226392 ✦ பெங்களூரு



தாயெனத் தமிழைத்
தாலாட்டும் சேயினமே !
தமிழினச் சொந்தங்களே !
தமிழ்மன பந்தங்களே !
தீயென நம்மைத் தீண்டிய துன்பங்கள்
போயின போயின பொசுங்கின போகியிலே !
தூய நன்மை தூண்டிய இன்பங்கள்
ஆயின ஆயின ஆக்கின தைப் பொங்கலிலே!

நிலத்துடன் கலந்த
நீர்கொளும் வண்ணம் -பால்
கலந்திடும் அரிசி
பொங்கிடும் வெண் பொங்கல் !

ஊருடன் கலந்த உறவு போல் - வெல்லச்
சீருடன் சேர்ந்த
சிறுபருப்பு சர்க்கரைப் பொங்கல் !

பேருடன் கூடிடும்
பட்டம் புகழாக- நெய்
சேரிடச் செய்து
சிறக்கும் மணப் பொங்கல் !

உடனுழைத்தவர் உயர்வில் காட்டும் நன்றி -
கடமையில் கூட்டும் மாட்டுப் பொங்கல்!
போக்கும் வரவும் போக்குவரத்து
ஆகும் - உறவு
ஆக்கும் கோக்கும்
காணும் பொங்கல் !



பொற்கிழிக் கவிஞர் சுப்பு முத்துசாமி
8095810787 ✦ பெங்களூரு



இது என்ன வள்ளுவர் பொங்கல் - கேள்விகள்
இதயத்தில் எழுந்தன நிலைத்தன
சிந்திக்க சிந்திக்க சிந்தனை
சிலந்தி வலையானது தடுமாறினேன்!

முயன்று சிந்தித்தேன் முடிவில் வெற்றி
முயற்சி தந்தது நெஞ்சம் மகிழ்ந்தேன்
தை பொங்கல் உண்டு மாட்டுபொங்கல் உண்டு
தமிழர்கள் இது கண்ட பொங்கல்!

பால் இட்டு பொங்கல் வைத்து - பொங்கலைப்
பகிர்ந்து உண்ணும் பழக்கம் இது -
வழிவழி வந்த தமிழர் பண்பாடு - பொதுநல
வழியை போற்றியவர்கள் நாம் தமிழர் அன்றோ!

பானைகள் மூன்று நிறுவி - முதல்
பானையில் அறத்துபால் இட்டு - இரண்டாம்
பானையிலே பொருள்பால் இட்டு - மூன்றாம்
பானையில் காமத்துப்பால் இட்டு

ஞானக் கனலை திருவள்ளுவர் மூட்டி
ஞாலம் இது நன்கு வாழ - திருக்குறள்
வள்ளுவர் வழங்கிய பொங்கல் அன்றோ - இது
வையத்தாருக்கு இட்ட பொங்கல் - அன்றோ

அருமைத் திருக்குறள் பொங்கல் என்று
பெருமை அகிலம் பேசும் பொங்கல் - அன்றோ
உலகம் நமது உறவு என்று பொதுநல
உள்ளம் விரித்தார் திருவள்ளுவர் அன்றோ!




கவிஞர் ராசு கோவிந்தன்

9900407496 ✦ பெங்களூரு




இலவசம் பெற்று வாழ்ந்திடாமல் - நாங்கள்
இறைவனின் அருள்பெற்று வாழ்ந்திட - நல்
முறையான வழியில் சென்றிடக்
கரையாத மன உறுதியோடு - கோயில்

மணி ஓசைக்கு நிகராக - எங்கள்
பணி என்று சிறந்திட - தமிழனின்
வாணிபம் உலகம் போற்றி! - நாங்கள்
வணங்கும் பொங்கலே வருக!

எங்கள் வாழ்வு சிறந்திட
எங்கும் அமைதி நிலவிட
நீர் நிலைகள் நிரம்பிட
ஊர் செழித்து வாழ்ந்திட

கார்மேகம் மழை பொழிந்திட - எங்களைக்
கடவுள் என்றும் காத்திட - நாங்கள்
கடமை செய்து மகிழ்ந்திட
மடமை அன்றே சென்றிட

விடியும் நாட்கள் நலமாகத் - துன்பம்
நொடியில் சென்று மறைந்திட
வருக வருக வருக - உன்
வருகை எங்களுக்கு நலமாகட்டும் - அன்று
மூவேந்தர் வணங்கிய பொங்கலையும் - நம்
முச்சங்கம் காத்த பொங்கலையும் - நம்
வள்ளுவர் போற்றிய பொங்கலையும்
வணங்கி மகிழ்ந்து வாழ்வோம்!



கவிஞர் இராதா கேசவ ஜானகிராமன்
80120 39040 ✦ பெங்களூரு



புதுப்பானையிலே பச்சரிசி சோற்றில் படையலிடும்நாள்
கரும்புகளில் எறும்பு ஊற களைகட்டும் நாள்..!
காளைகளைக் களிப்படையச் செய்யும் நாள்
காளையர்களுக்கு களிப்பூட்டும் நாள்...!

வள்ளுவனை நினைக்க வைக்கும் நாள்
உறவுகளையும் உற்சாகமாக காணச் செய்யும் நாள்...

உலகுக்கு விடியல் தரும் ஆதவனுக்கும்
உலகுக்கு விருந்து படைக்கும் உழவனுக்கும்
உழவு மாடுகளுக்கும் நன்றி கூறும் நாள்...!

புதுப்பானையிலே பச்சரிசியுடன் நீரு
பொங்கி வழியுது பாரு
வெந்தபின் பச்சரிசி வெண்சோறு
பொங்கலுனு தானே இதற்கு பேரு...!

தை மகளே, நீ பிறக்கையிலே...
பாமரனுக்குப் புத்தாடை அணிவிக்கிறாய்
மஞ்சள் நாணிலே பானைகளுக்கு
மகிமை சேர்க்கிறாய்...!

ஆவாரம் பூவையும் அவசியமாக்குகிறாய்
வாழையையும் வாசலிலே வளரச் செய்கிறாய்...!
மாடுகளின் கொம்புகளில் தீட்டப்படும் பல வண்ணம்
தைபிறந்தாலே வழி பிறக்கும் என்பது மக்களின் எண்ணம்
வழி பிறக்கையிலே வாழ்க்கை மேம்படுவது திண்ணம்
நீயே தமிழர் விழாக்களில் அடையாளச் சின்னம்.



பாவலர் எட்வின் நெல்சன் புர்ட்டாடோ
080-25463594 ✦ பெங்களூரு



பைந்தமிழரின் பொங்கல்
பொங்கல் திருநாள் தரணிவாழ்
தமிழர்க்கு இன்பத் திருநாள்
தங்கிய இன்னல் யாவும்
தகர்ந்திட புத்தின்பம் மேவும்
பொங்கிப் புலனாய் நீடும்
புதுவெள்ளம் பெருக்கைப் போலும்
எங்குமுள தமிழர் வாழ்வில்
ஏற்றமே பெருக்கும் திருநாள்!

உலகத்து அச்சாணி உழவர்
வளமையில் திளைக்கச் செய்யும்!
காழ்ப்புணர்வை அகற்றி நெஞ்சில்
கனிவளமதைச் சுரக்கச் செய்யும்!
பாழ்செயல் புரிவோர்க் கெல்லாம்
படிப்பினை புகட்டி அன்னோர்
வீழ்ச்சியை உணரச் செய்யும்!
அறநெறி காட்டும் திருநாள்!

உழவும் உற்பத்தியும் நாட்டில்
உணவுப்புகழ் சேர்க்கும் மக்கள்
பொற்படை இனிய வாழ்க்கை
புரிதலால் வளமை சேர்க்கும்
கற்றவர் சிறப்பைப் போலும்
கடுமையாய் உழைப்பவர்க் கென்றும்
முயன்ற அனைத்தும் நல்கி
முன்னேற்றம் தரும் பைந்தமிழரின் பொங்கலே!









## கவிஞர் செழியன் - சம்பத்

9986999894 ✦ பெங்களூரு



சில்லென்று வீசும் மென் காற்று
விண்மீன்கள் வானத்தில் வட்டமிடும்
வண்ணங்கள் வகையாய் புரியும் முகில்கள்
பூமித்தாயின் மடியில் தவழ்ந்திடும் கதிர்கள்

என்னைப் பாரு என்அழகைப் பாரு
என வயல்வெளியில் புன்சிரிக்கும் பொன்மணிகள்
சமைத்துப்பாரு நாயகி சுவைத்துப்பாரு
என கூவியழைக்கும் நெற்கதிர்கள்

ஏரைப் பூட்டினான் ஏழை உழவனவன்
இருந்தும் இல்லாமையை வீட்டில் வைத்தான்
நீ நான் என்னும் ஆணவம் மாறி
நாம் என்று சொல்லும் தைத்திருநாள்

உள்ளம் மகிழ்ந்திடும் உவகைப் பொங்கல்
உலகெலாம் கொண்டாடும் அறுவடை நாளிது
கள்ளம் இல்லா வகையில் புத்தாடையுடன்
ஊரெல்லாம் மனம் மகிழும் உழவர் திருவிழா

பூமித்தாயைப் படைத்தான் இறைவன்
பயிரிட்டு நமக்கு உணவளிப்பவன் உழவனே
பட்டாம் பூச்சியாய்ப் பறந்து மகிழ்வான்
பார் மணக்க பொங்குவோம் பைந்தமிழரின் பொங்கல்



## கவிஞர் ஜெயலட்சுமி மணிகண்டன்

9652234802 ✦ ஐதராபாத்



பழையன கழிதலும் புதியன புகுதலும் பொங்கலாம்
மார்கழி மாதம் முப்பது நாட்களும்
வர்ணக் கோலமிட்டு அதன் நடுவில் சாணம் வைத்து
சாணத்தின் மேல் பூசணிப்பூ வைத்து ரசித்து
ரசித்த அந்த சாண உருண்டைகளுடன்
பழைய பொருட்களையும் எரிப்பதே போகி
குப்பை கூளங்களை அகற்றுவதே போகி!

வாசலை மெழுகிச் சாணமிட்டு
வர்ணக் கலவையில் கோலமிட்டு
புதுப்பானையில் புது அரிசியிட்டு
பாலும் வெல்லமும் நெய்யும் சேர்த்து
அதனுடன் முந்திரியும் திராட்சையும் கலந்து
சர்க்கரைப் பொங்கல் மணம் வீடெங்கும் கமழ
சுற்றம் சூழ சூரியனுக்கு விருந்து படைத்து
பொங்கலோ பொங்கல் என்று போற்றிடுவோம் !

மாடுகளை அலங்கரித்து நன்றிகூறி
தொன்று தொட்டு வரும் ஜல்லிக்கட்டு
வீர விளையாட்டை ஆடி வெற்றி வாகை சூடி
பொங்கலைக் கொண்டாடி மகிழ்வோம் !

உணவை அளித்த விவசாயிக்கு நன்றி கூறி
அடிக் கரும்பின் சுவையையும் சுவைத்திடுவோம்!
தமிழர் திருநாளாம் தைபொங்கலை போற்றுவோம்!
பொங்கலோ பொங்கல்! பொங்கலோ பொங்கல் !



கவிஞர் எஸ். உமாதேவி

94866 0882227 ✦ கோவை



சாதி மத பேதமுறா சங்க காலத்தே - தமிழன்
தன் அச்சில் சாய்ந்த புவி சுழல் கணித்தே
கதிர் வீழ்த்தும் பகலவனுக்கு மையநிலை கொடுத்தே
காலத்தை வகுத்திட்டான் தட்பவெப்பம் பொறுத்தே!

உத்தராயணத்தில் உதித்த கதிர் பனி அறுக்கும் - அதுவே
ஓர் ஆண்டின் தொடக்கமெனத் தை பிறக்கும்
இருள் பருகி ஒளி கக்கும் இறை கதிரே என்று - தமிழன்
ஊரோடும் உறவோடும் நன்றி பகர்வான் தை அன்று!

ஆடியிலே விதைத்த விதை கதிர் முற்றி ஆடும்!
அவை களஞ்சியங்கள் கண்ட பின்னே களி மிகுந்து பாடும்!

பனித்துளியை நுனி ஏந்தி கூனலிடா புல்லும்
கணுமுற்றி சுவை எட்டி தலை நிமிர்ந்த கன்னலும்
கதிர் முற்றித் தலை கவிழ்ந்து மணம் கமழும் செந்நெல்லும்
கை கூப்பி வருகவெனத் தமிழ் மகளைச் சொல்லும்!
தோரண வாயிலெங்கும் மாவிலைகள் மணக்கும்!
நிலைகள் யாவும் காப்பு தொடங்கிப் புது ராகம் இசைக்கும்!

கொடி விளைந்த காய்கறிகள் படையல் என ஆகும்!
வெற்றிலை களிப்பாக்கும் தீங்கனியும் அதில் பாகம்!

சாணமிட்ட முற்றமதில் படர் வெண்கோலமும்
சுள்ளியிட்ட சிறு நெருப்பில்
உலை ஏறும் புது மண் கலமும்
பச்சரிசி வெல்லமொடு திராட்சை
முந்திரி ஏலமும்
பசு நெய்யைக் கலந்த பின்னே
அது மணத்தாலே கமழும்

அது நுரை தள்ளிப் பொங்கி எழ, சுப மங்களங்கள் சொல்லும்
பொங்கலோ பொங்கலெனக் குலமாதர் புடை சூழும்-அது
ஓர் ஆண்டின் மகிழ்வதனை ஓர் நாளில் கொள்ளும்!



## கவிஞர் கோவை வே.சண்முகதேவி

✦ கோவை



தைத்திங்கள் பிறந்தாச்சு!
பொங்கல் நாளும் வந்தாச்சு !

வாசலில் நீர் தெளிச்சு
வண்ண வண்ணக் கோலமிட்டு
அடுப்புக் கூட்டி விறகு சேர்த்து
புதுப்பானை விளக்கி வெச்சு
மஞ்சள் குங்குமம் அலங்கரிச்சு
அறுத்தெடுத்த கதிரெல்லாம்
அழகு நெல்லாச் சேர்ந்திருக்க
பொங்கிவரும் பொங்கலிலே
மங்கிப் போகும் நம் சோகம்!

அளவான வெல்லம்
அமுதுச்சுவை சேர்த்து வர
ஏலமும் முந்திரியும்
எட்டுத்திக்கும் மணம் பரப்பும்
கண் நிறைந்த காய்கறியால்
கண் திறந்த கதிரவனும்
களிப்புற்று வாழ்த்திடவே
நாகரிக மோகத்தில்
எரிவாயு அடுப்பினிலே
உஸ்ஸென்ற சத்தத்தில்
உருவாகும் பொங்கலில்
தேடினாலும் கிடைப்பதில்லை மண்வாசம்!

ஆண்டெல்லாம் சேற்று வயலாடி
அகிலமெல்லாம் வயிறு நிறைக்கும்
அற்புதப் பொங்கலைப் போற்றுவோம்!



கவிஞர் விஜி மோகன்
9445949 504, கோவை



மெய் உதிர்க்கும் நீர்த்துளியோ உழைப்பின் பொங்கல்!
மேகம் தரும் நீர்த்துளியோ கடலின்பொங்கல்!
நெய் மணக்கும் கார்குழலோ அழகின் பொங்கல்!
நீர் வளர்க்கும் தாமரையோ கதிரின் பொங்கல்!

தைபிறக்கும் நாளிதுவோ தமிழின் பொங்கல்!
தமிழ்சுரக்கும் நற்கவியோ அமுதின் பொங்கல்!
திங்கள்எல்லாம் தைத்திங்கள் ஆவதில்லை!
திறமைஎலாம் கவிப்புலமை படைப்பதில்லை!

புவி மனிதரெல்லாம் தலைவரெனச் சிறப்பதில்லை!
வெங்கொடுமை பலகாலம் நிலைப்பதில்லை!
வீரப்படையைப் பொடிப்படையும் வெல்வதில்லை!

கதிரடித்துக் களம் சேர்க்க விளைச்சல் வேண்டும்!
கயவர்தமைக் களம் பார்க்க வீரம் வேண்டும்!
பொதிகையெனப் போரடிக்க மாடு வேண்டும்!
பொல்லாங்கை முதுகொடிக்க மானம் வேண்டும்!

சதிராடும் வஞ்சத்தை நொறுக்க வேண்டும்!
புதிய சரித்திரத்தைத் தமிழர் இனி படைக்க வேண்டும்!
இளைத்தவரா எம் தமிழர்? இல்லையென்க! அட
இடுப்பொடிப்போம் எதிரிகளை என்றுசொல்க!

விளைச்சல் இனித் தமிழகத்தில் என்ன வேண்டும்?
வீறுகொண்ட வேங்கையென எழுச்சி வேண்டும்!
களைத்ததெல்லாம் போதுமடா கலப்பைத் தோழா!
இனிக் கரும்பெதற்கு நம் ஒற்றுமை இருக்க
இப்பொங்கல் நாளில்மகிழ வைப்போம்மழைப் பொங்கலை!




கவிஞர் ஆர். தேன்மொழி

வழக்குரைஞர், கோயம்புத்தூர்




தாகம் தணிக்கும் தண்ணீருக்கும்
வாழ வழி கொடுக்கும் நிலத்திற்கும்
நிலத்தை உழும் உழவனுக்கும்
நீரைக் கட்டுப்படுத்தும் நெருப்பிற்கும்
ஒளி சுடரும் சூரியனுக்கும்
மழை பொழியும் வானிற்கும்
தலை நிமிர்ந்து நன்றி சொல்லும்
தமிழர் திருநாள் எங்கள்
தைத்திருநாள்!

மண்ணுக்குள்ளே வியர்வையைச் சிந்தி
சேற்றுக்குள்ளே கால் பதித்து
சோற்றுக்கு வழி செய்த
உழவர்களின் உழைப்பிற்கு
மரியாதை செய்யும் திருநாள்
தைத்திருநாள்!
வானம் பொழிந்த மழையிலே
ஏர்பிடித்து உழுததால்
துளிர்விட்ட நெல் மணியைக்
கண்மணியாய்க் காப்பாற்றிய
உழவனுக்கும் கால்நடைகளுக்கும்
உரக்கநன்றி சொல்லும்
உழவர் திருநாள்
இத்தைத் திருநாள்!
சூரியன் உதிக்கும் நேரத்தில் உறவினர்கள் கூடி
வானம் பொழிந்த மழை நீரைக்
குயவன் செய்த பானையில் ஊற்றி
அடுப்பில் ஏற்றி நெருப்பைப் பற்றியதால்
நுரையாய் தள்ளியது நீர் மட்டுமல்ல
உழவனின் மூச்சுக் காற்றும் தான்!
உழவனின் மூச்சுக் காற்றால்
உலகமே முழுமையாய்ச் சுவாசிக்கின்றது
பொங்கல் பானையில்
பொங்குகின்ற பொங்கலைப் போல
நம் வாழ்விலும் மகிழ்வுகள்
பொங்கச் செய்த உழவர்களுக்கு
உளமாற நன்றி சொல்லும் நன்நாள்.
தைத்திருநாள்!
வாழ்க தமிழர் திருநாள்!




கவிஞர் இரா. இரவி.

98421 93103 26 ✦ மதுரை




உலகிற்கு எழுத்தறிவித்தவன் தமிழன் என்று
உணர்த்தியது தொல்லியல் ஆய்வில் கீழடி இன்று!
உலகத் தமிழர்கள் யாவரும் ஒன்றிணைந்து
ஒற்றுமைப் பொங்கலை இட்டு மகிழ்வோம்!

பாவாணர் உரைத்தார் அன்றே நன்றே
பைந்தமிழே உலகின் முதல்மொழி என்றே!
தமிழர்களாகப் பிறந்ததற்குப் பெருமை கொள்வோம்
தமிழ்மொழியின் சிறப்பைத் தமிழர்கள் அறிந்திடுவோம்!

உலகிற்கு நாகரிகம் கற்பித்தவன் தமிழன்
உன்னத அறிவியலும் அறிந்தவன் தமிழன்!
ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய வரலாறு
அற்புதத் தமிழுக்கு உண்டு என்பது உணரு!

தமிழிலிருந்து பிறந்தவை தான் மற்ற மொழிகள்
தமிழ்ச் சொற்கள் பல உண்டு ஆங்கிலத்தில்!
ஆதியில் சிறந்து பிறந்த அற்புதம் தமிழ்
அனைத்து மொழிகளின் தாய் நமது தமிழ்!

செம்மொழிகள் சில இருந்திட்ட போதும்
செம்மொழிகளில் சிறந்த மொழி நம் தமிழ்!
காலத்தால் அழியாத கற்கண்டு நம் தமிழ்
கண்டு உணர்ந்து கற்பிப்போம் குழந்தைகளுக்கு தமிழ்!

உழவைப் போற்றிடும் உன்னதத் திருநாள்
உழைப்பைப் போற்றிடும் ஒப்பற்ற நன்னாள்!
புத்தரிசிப் பொங்கலிட்டு புத்தாடைகள் அணிந்து
பூரித்து மகிழ்ந்திடுவோம் உலகத் தமிழர்கள் யாவரும்!

தமிழன் என்று சொல்லடா தலை நிமிர்ந்து நில்லடா
தரணிக்கு உரக்க நீ சொல்லடா புறப்படு தமிழா!..........



## முனைவர் புதுகை மு.பா.

புதுக்கோட்டை, தமிழ்நாடு



உலகிலெலாம் தன்மொழியின் பெருமையை உயர்த்துகிற
ஊடகமே இலக்கி யம்தான்!
உயர்தனிச்செம் மொழியென்னும் உன்னதத்தைப் பெருமையினை
உருவாக்கும் இலக்கி யம்தான்!
புலர்கின்ற விடியலிலே தோன்றுகின்ற பேரொளிபோல்
புகழ்நாட்டும் இலக்கி யம்தான்!
பொன்னான மொழியென்று சொல்லுதற்குக் காட்டாகும்
பூத்துயர்நல் இலக்கி யம்தான்!

மலர்கின்ற போதெல்லாம் மணக்கின்ற மலர்போல்
மகிழ்வூட்டும் இலக்கி யம்தான்!
மனிதர்குல நாகரிகப் பண்பாட்டை உலகோரின்
மடிசேர்க்கும் இலக்கி யம்தான்!
உலர்தன்மை இல்லாமல் உயர்தன்மை மொழிக்கெல்லாம்
ஊட்டுமுயர் இலக்கி யம்தான்!
நலமான அந்நெறியில் நடைபயிலும் நல்லவர்க்கு
நாட்டரங்கு பெருமை கூட்டும்!

நன்றான இலக்கியநற் சோலைக்குள் புகுவோர்க்கு
நல்வாழ்வு நெறிகள் கிட்டும்!
வென்றுஎன்றும் இவ்வுலகில் நின்றுபுகழ் கொண்டோரின்
விவரங்கள் நம்மை எட்டும்!
வெற்றிக்கு வித்தாகும் சிந்தனைகள் மூளைக்குள்
விரைவாகச் சென்று முட்டும்!
என்றென்றும் நிலையான இனியதமிழ்ச் சோலைக்குள்
இளைப்பாறு சென்று நீயும்!

இணையில்லா மனிதகுலப் பிறப்பெடுத்த நற்பயனை
இயற்றுகிற ஆற்றல் தோயும்!
கன்றினுக்கு மட்டுமல்ல காசினியின் மாந்தருக்கும்
கனிவோடு பாலை ஈயும்
கருணையுள பசுவாகித் தமிழ்ச்சோலை தனைக்காக்க
கவினுலகு நம்மை ஆயும்!
இலக்கியத்தேன் சாரலெனும் அமைப்புதனை உருவாக்கி
இனியதமிழ்த் தொண்டை ஆளும்!

இயல்பினிலே நிலைத்துநிதம் தமிழ்பொங்கச் செய்கின்ற
இனியவர்க்கென் பொங்கல் வாழ்த்து!
நிலத்தினிலே விளைச்சல்தனை நீங்காமல் செய்துலகின்
நீள்பசியை நீக்கி வாழும்
நெஞ்சமதில் வஞ்சமிலா உழவர்களின் தாள்பணிந்து
நீட்டுகிறேன் பொங்கல் வாழ்த்து!





# கவிஞர் புதுகை வெற்றிவேலன்

94445 21773 30 ✦ புதுக்கோட்டை



வளமிழந்து பலமிழந்து வறுமைக் கோட்டில்
வாழுகின்ற உழவர்கள் வயலி றங்கி
நிலம்விளைத்த கதிரறுத்தே அடித்துத் தூற்றி
நெற்கலந்த பதரகற்றி மூட்டை கட்டி
உலகமக்கள் உய்வதற்கே உணவ ளித்தே
உளம்கனிந்து உவக்கின்ற உழவர் தாமும்
நலக்கதிரோன் உதவிக்கு நன்றி சொல்ல
நற்கோல வாசலிலே பொங்கல் வைப்பர்

கார்முகிலன் மழைபொழிந்தான் பயிரைக் காக்க
கதிரவனும் ஒளிதந்தான் உயிரைக் காக்க
ஏருழவன் இருவருக்கும் நன்றி சொல்ல
எடுக்கின்ற நல்விழாதான் பொங்க லாகும்
சீர்கொடுத்துப் பெற்றோர்கள் வாழ்த்த ளிப்பர்
சீர்பெற்று மகிழ்வார்கள் பிறந்த பெண்கள்
ஊர்மக்கள் தைத்திங்கள் முதலாம் நாளில்
உறவோடு கூடிநின்றே பொங்கல் வைப்பர்!

பொங்கலென்று சொல்லவந்தால் ஒன்று சொல்வேன்
பொதுவான விழாவென்றால் பொங்கல் ஒன்றே
சங்ககாலம் இடைக்காலம் இந்தக் காலம்
சங்கொலித்துப் பொங்கலிடும் வசந்த காலம்
தங்குதடை ஏதுமின்றி தொடரும் பொங்கல்
தமிழர்க்கு வாய்த்ததொரு திருநாள் அன்றோ!
பொங்கலின்றி வேறுவிழா தமிழர்க் கில்லை
புரிந்துகொள்ள மறுப்பவர்கள் தமிழர் இல்லை!





## கவிஞர் மா உ ஞான வடிவேல்

98407 49059 ✦ புதுக்கோட்டை



நீர்பொழிந்து நிலஞ்சிலிர்த்த வரலாறுண்டு!
நீர் மலிந்து விளைவழித்த வருடமும் உண்டு!
யார்பழித்துச் சிரித்தபோதும் தெய்வம்போல
யாவருக்கும் உணவளிக்கும் உழவர் உண்டு!!

உருவான தொண்டுகளில் உழவே நன்று
உழவர்போல் நற்குணத்தார் எவரே உண்டு.?
மனிதரிடம் பழகுவதில் ஆபத்துண்டு-உழவில்
மண்ணோடு புழங்குகிற மகத்துவம் உண்டு.

ஆடுகளும் மாடுகளும் அணிபுரி சேனை
பீடுமிகு ஏர்க்கலப்பை பீரங்கிப் படை
சூரியனும் மேகங்களும் சேவகர் கூட்டம்
சேற்றில்உழல் உழவுத்தொழில் ஆக்கும் போர் ஆட்டம்!

ஆடியிலே விதைவிதைத்து அருங்களை அகற்றி
ஓடிவரும் நீர்திருத்தி ஒழுங்காய்ப் பாய்ச்சி
உரமிட்டு, தினந்தொட்டு ஊட்டி வளர்த்து
மார்கழியில் கதிரறுத்தால் மகிழும் வையம்.

தைமுதல்நாள் நெய்வழியப் பொங்கல் பொங்கித்
தழைமஞ்சள் பானைகளின் வாயில் சுற்றி
வையமெலாம் வாழ்வாங்கு வாழ வேண்டி
வைக்கின்ற பொங்கல்நாள் வாழ்க வாழ்க!!

மாடுகளின் பாடெண்ணி மாட்டுப்பொங்கல்!
மாதர்களின் அழகெண்ணி காணும்பொங்கல்!
ஆடவரின் வலிவெண்ணி ஏறு தழுவுதல்!
அனைத்துயிரின் வாழ்வைஎண்ணிப் பொங்குக பொங்கல் !!!



# கவிஞர் சுந்தர பழனியப்பன்

தலைவர், பண்ணுருட்டி செந்தமிழ்ச் சங்கம்



புத்தரிசி புதுப்பானை பொங்கலிட்டு...

புத்துணர்வைப் பூமியெங்கும் தழைக்க வைத்து...

இஞ்சிமஞ்சள் கரும்போடு மகிழ்வைக் கூட்டி...

சாதியச் சடங்குகளை தீயிலிட்டு...

சமத்துவத்தை அனைவர் நெஞ்சில் விதைத்து வைப்போம்...

பொன்மணியாம் நெல்மணியைத் தினம் விதைத்து...

விவசாயம் விவசாயிகளைத் தழைக்கச் செய்வோம்...

வீதியெங்கும் வேதனை வறுமை அதனை...

விரட்டி நல்லின்பம் பொழிய வைப்போம்...

தரணி போற்றும் ஒருநாளாம் திருநாளை...

உறவோடும் நட்போடும் மகிழவைப்போம்...

தமிழ்த் தழைக்க உழைக்கின்ற நல்லவர்கெல்லாம்..

அகமகிழப் பொங்கல் வாழ்த்து சொல்வோம்....



# கவிஞர் மீனாட்சி சுந்தரமூர்த்தி

கடலூர்.



நலம்தானா? இயல்பாய் உறவு
நட்புகளை வினவிட அச்சம் சூழ்ந்து....
நாளல்ல ஆண்டொன்றே ஓடிப்போனது....

ஓடியாடிக் களித்த பள்ளி வளாகமதில்
ஆடிடும் மரங்களின் நிழல்.
பேருந்தில் முண்டியடித்து ஏறி,
இடிபாடுகளில் சிக்கிக் கசகசத்த
பயணம் மறந்து போனது.

சோளப்பொரி கைநிறைத்துப் புதுப்படம்
இரசிக்க அரங்கு செல்வது வினாவானது.

கண்பேச, அச்சாரம் போட்டு மாளிகை
கண்ட மங்கல மணவிழா
காந்தி சொன்ன எளிய விழாவானது.

அன்றாடங் காய்ச்சிகள் முடங்கி,
வருவாய் தொலைந்து சிறுதொழில்
நலிந்து, நாள்பல ஆனது.

திருவீதி உலா வந்த தேரோட்டம்,
திருச்சுற்று போதுமென
எல்லை வகுத்துக் கொண்டது.

இனி, இல்லங்களில் இன்பம் தர
எல்லாமும் நிறைத்து
இதயங்களில் உவகைபூக்க
எழுவாய் தைமகளே !

புதுரத்தம் புதுப்புனலாய் பாய்ந்தோட,
புதுவாழ்வு தந்தெமை வாழ்விப்பாய் நீஎன்றே
புதுப்பொங்கல் படைப்போம்!





# கவிஞர் தமிழ் இயலன்

9443019087 ✦ கடலூர்



உழைப்பின் பெருமை
உரைக்கும்முறையே
உயர்தனிப் பொங்கல் திருநாளாம்!

தழைக்கும் அன்பில்
தனித்து நிற்கும்
தமிழின் சிறப்புத் திருநாளாம்!

பிழைக்க உதவும்
மாடு கலப்பை
போற்றி மகிழும் திருநாளாம்!

அழைக்கும் உறவும்
அறிந்த நட்பும்
அன்பாய்ப் போற்றும் திருநாளாம்!

இழைந்து நிற்கும்
மொழிதான் நமக்கு
இன்னுயிர் என்பதை உணர்வதுடன்

குழைந்து நெளிந்து
குலத்தைக் கெடுப்பார்
கொடுமதி அழித்தால் பெருநாளாம்

ஆழம் மிகுந்த
கடல்பிரித் தாலும்
அன்பால் என்றும் இணைந்து நிற்கும்

ஈழம் அமையும்
நாளே நமக்கு
இனிப்புப் பொங்கல் வருநாளாம்!





கவிஞர் விஜயகிருஷ்ணன்
9600644446 ✦ சென்னை



ஆடிமாசம் ஆகாசத்த அண்ணாந்து பாத்து..,
அருக வந்தமழைய கண்டுவிட்டாராம் நாத்து..

ஏர்பூட்டி நீரபாய்ச்சி சேட ஓட்டி..,
இடுப்ப வளைச்சு நாத்து நட்டுகுலவ பாடி..
வரப்ப சுத்திக்களைய கொத்தி வாய்க்காவெட்டி..,
வயலப்பாத்து வளரும் பயிர உயிரா காத்து..

கதிரகொண்டு களத்துமேட்ல பதரநீக்கி..,
உதிரும்நெல்ல குதிருக்குள்ள ஒண்ணா சேர்த்து..
எதிரவந்த மண்டிகாரு சொன்ன வெலைக்கு..,
உதிரம்சிந்தி உழைச்சவங்க நெல்ல அளக்க..

கொடுத்த பணத்தில்குட்டியாகப் பானைவாங்கி..,
குடும்பத்தோட தைமாசம் பொங்கவச்சு..

கூடவரும் மாடுகள குளுப்பாட்டி..,
கொம்புக்கெல்லாம் வண்ணத்தோட குஞ்சங்கட்டி..
கொட்டாயில பூசப்போட்டு ஊரக்கூட்டி..,
தேர்வடமா வண்டியோட்டி தீபங்காட்டி.

மல்லுகட்டி ஜல்லிகட்டில் திமிலத்தாங்கி..,
தமிழன்தானே வீரத்துக்கு தலைமையின்னு..
ஒலகத்துக்கு உரக்கச்சொல்லி உழவன் பெருமை
நிலமொசத்தும் நல்லநாளே உழவன்திருநாள்!



கவிஞர் கு.மா.பா. திருநாவுக்கரசு
9840634279 ✦ சென்னை



மதுரகவி வள்ளுவனார் மண்ணோர்க்கு யாத்த
பொதுநூல் குறளமுதம் போற்று

செய்யுட் குறளமுதைச் செப்பிய வள்ளுவனார்
உய்யும் வழிகாட்டு வார்.

கையடக்க நூல்குறளைக் கற்றுத் தெளிவுற்று
மெய்யுணர்ந்து ஏற்கும் மனம்

பொய்யா மொழியென்று போற்றும் திருக்குறளே
வையகத்துள் மாந்தர் வரம்..

பண்புரைக்கும் பண்குறளைப் பன்மொழிபார் ஏற்றதுபோல்
நன்னூல்கள் உண்டோ நவில்

கூவும் குயிலாய்க் குறள்படைத்த வள்ளுவனின்
கோவில் மயிலைக்குப் பேறு.

நூற்றுமுப் பத்துமூன்று நுண்ணதி காரத்தின்
கூற்றுகளில் முப்பால் குறள்

வள்ளுவனும் வாசுகியும் வாழ்ந்த மயிலைக்கே
இல்லை நிகரோர் இடம்.

ஈரடிக்குள் சீரேழில் ஈர்க்கின்ற வார்த்தைகளில்
கூறும் அறமே குறள்.

அறம்பொருள் இன்பமென ஆக்கிய முப்பாலில்
குறளமுது ஊட்டும் குரு



கவிஞர் கு.மா.பா.கபிலன்

9884660659 ✦ சென்னை



நஞ்சையும் புஞ்சையும் நெற்கதிரைப் பிரசவித்த
நிம்மதியில் களத்து மேட்டில் மகிழ்ந்திருக்கும்
நெஞ்சங்கள் மகிழ்ந்திட உழவர் இல்லங்களில்
நெல் மூட்டைகள் வீடெங்கும் நிறைந்திருக்கும்!!

பிஞ்சுகள் மனமெலாம் பொங்கும் காவிரியாய்
பொங்கலைக் கரும்பைச் சுவைத்திருக்கும்.
வளையலின் ஒலிகுலுங்க வஞ்சியர் விரல்கள்
வரவேற்புக் கோலத்தை வாசலில் வரைந்திருக்கும்!

தலையிலே வாசமலர் தமிழாய் மணக்க
தூயபுத்தாடை இடையை அணைத்திருக்கும் அழகுக்
கலையிலே தனைமறந்து கதிரவனும் தன்
பொன்னிறக் கதிர்களைப் பொங்கல் பரிசாய் அளித்திருக்கும்.!!

உலையிலே புத்தரிசி பொங்கும் ஒலிகேட்டு
ஊரே ஒன்றுகூடிப் பொங்கலோ பொங்கல் குரல்எழுப்பி..
உதய சூரியனுக்குப் பொங்கலிடும் ஒரு நாளாம்!!
உலகத்தமிழர்க்குப் புத்தாண்டுத் திருநாளாம் !!

களத்து மேட்டிலே நெற்கதிர்களைப்போர் அடிப்பது
கிராமத்துப் பொங்கல் !!
வீட்டில், ரோட்டில் வீணாகப்பேசியே போரடிப்பது
நகரத்துப் பொங்கல்

மக்கள் கூடி-பொங்கல் வைப்பது கிராமத்துப்பொங்கல்.!!
குக்கர் கூவி-பொங்கல் வைப்பது நகரத்துப்பொங்கல்..!!
ஊர் மானம் காக்கும்நெசவாளி-
ஒட்டு முழத்துணியோடு போகிறான்.
பாருக்கு அமுதூட்டும் விவசாயி-
பட்டினி கிடந்தே சாகிறான்.

இனியேனும் சமத்துவப் பொங்கல் சமைப்போம்
பூமிப் பானையில் மனிதநேயப் பொங்கல் இடுவோம்.!!



கவிஞர் லிங்கராசா
9884147572 ✦ சென்னை



பொதுமறையைத் தந்தபிரான்
பொய்யில் புலவனவர்
பொதுவாழ்வை முப்பாலில்
பொலிவுடன் செப்பிட்டார்
கூட்டுமற வழிமுறைகள்
குறட்பாவில் குவிந்ததனால்
நாட்டினிலே வாழ்வியலின்
நான்மறைக்கு மேலதுவே!

ஒன்றேமுக் காலடியில்
உலகத்தை ஆளுகின்ற
அன்புநெறி வாழ்வியலே
அய்யனவன் வாக்காகும்
கல்லாமை விலங்கென்றார்
கள்ளுண்ணா சிறப்பென்றார்
கொல்லாமை அறமென்றார்
குறள்நெறியே வேதங்கள் !

செல்வத்துள் பெருஞ்செல்வம்
செவிச்செல்வம் என்றிட்டார்
சொல்வதிலும் இனிமைதனைச்
சேர்த்திடுதல் பயனென்றார்
கல்வியினைக் கற்றிடுதல்
கண்ணொளிபோல் என்றிட்டார்
தெள்ளுதமிழ்த் திருக்குறளைத்
தேர்ந்துநாம் கற்றிடுவோம்!

இல்லறத்தைக் காத்துநல்
சொல்லறம் காப்பவளே
இல்லத்தைக் காத்திடும்
நற்குணப் பெண்ணென்றார்

நல்லறத்தைப் பேணியே
நற்பய னெய்திடவே
சொல்லறத்தின் தீஞ்சுடர்
ஆனது திருக்குறளே!

அறிவினை அறிந்தவன்
அளவினை கண்டவன்
தறியினில் நெசவுபோல்
தமிழினில் நெய்தவன்
மறையினைத் தமிழுக்குப்
புதையலாய் கொடுத்தவன்
நெறியினைத் தருங்குறள்
வழிநடந் தேற்றுவோம்!

வள்ளுவத்தின் வழிநடந்து
வாழ்வியலைப் பேணிடுவோம்
தெள்ளுதமிழ்ப் பயிர் வளர்த்து
தெம்மாங்கு பாடிடுவோம்
உள்ளத்தில் ஊற்றெடுத்து
ஒப்பில்லா வாய்மையினை
எல்லாரும் இன்புறும்நல்
இன்னமுதம் வள்ளுவமே!

உலகிற்கே வாழ்நெறியை
வகுத்திட்ட வள்ளுவரின்
நலமெய்தும் பண்பட்ட
நற்சான்றோர் வேதமென
எந்தவொரு மதத்திற்கும்
எந்தவொரு இனத்திற்கும்
எந்தவொரு நாட்டிற்கும்
பொதுமறையாம் வள்ளுவமே!



கவிஞர் தஞ்சை எழிலன்
98841 44575 ✦ சென்னை



மனிதரெல்லாம் மகிழ்ந்து நின்றால் விழாவாகும்!
மங்காத புகழ் பெருகி இருள் விலகும்!
தைத்திங்கள் முதல் நாள் தான் தமிழன் விழா!
தலைநிமிர்ந்து தரணி போற்றும் பொங்கல் விழா!

மஞ்சள் கொத்து வாங்கிவந்து இஞ்சி துண்டைச் சேர்த்துக் கட்டி
எறும்பு ஊரும் கரும்போடு இனிய புதுப்பானையிலே
பச்சரிசி பதமாய் விட்டுப் பாலையும் அதில் சேர்த்து
பொங்கிடுவோம் நல்ல பொங்கலோ பொங்கல் என்று!

உறவுகளின் வீடுகளில் உணர்ச்சிகர பொங்கல்!
மனிதர்களின் உள்ளங்களில் மகிழ்ச்சிகர பொங்கல்!
சுற்றங்களும் நண்பர்களும் சூழ வரும் பொங்கல்!
பொங்கட்டும் இந்த புதுமையான பொங்கல்!
அத்தனைக்கும் ஆசைப்பட்டு அளவின்றி வாழ்வதனால்
பெத்தவரைக்கூட பெருஞ்சுமையாய் எண்ணுகின்றார்– ஓர்
அனுபவத்தின் வழி காட்டி ஆங்கே இல்லை என்றால் - இந்த
அவனியே திசை மாறும், தடுமாறும் புரிந்துகொள்வோம்!

பெண்மையைப் பாராட்டி மகிழ்ந்திருப்போம்!
அது பெரும் சக்தி என்பதனை உணர்ந்திருப்போம்!
மங்கையர் குலத்தையே போற்றிடுவோம் -நல்ல
மகிழ்வுடனே பொங்கலைப்போல் வாழ்ந்திடுவோம்!

மழைநாளில் வீசுகின்ற மண்மணமும் அழகுதான்!
வளைகாப்பின் வண்ணம்போல்
வானவில்லும் அழகுதான்
பஞ்சு வெடித்துப் பறப்பதை போலப்
பால் பொங்கி வழிவதும் பரம்பரை அழகுதான்!



கவிஞர் திருவை பாபு
96001 93890 ✦ சென்னை



செங்கதிரே வருக வருக!
செழுமை பொங்கல் நாள் வருக வருக!
தையலுக்கு உவகையாம் தைநாள்!
தை தை என ஆடிப்பாடி வருக!

உழவர் நாள் வருக உலகம் வாழ வருக!
பொன்விழாபோல் பூரிப்புடன் வருக!
மண்சிறக்க ஓடி வருக வருக!

கரும்பின் சுவையெனத் தமிழ் வாழ்வு!
திருநாளாய் மலர்க பெரும்பொங்கலாய் எழுக
தங்கட்டும் வசந்தம் தரணி எங்கும்
புதுப்பரணிப் பாடி வீரப்பொங்கல் காண்போம்!

விவசாயிக்கு நன்னாள் மண்ணுக்குப் பொன்னாள்
அவனியிலே இதற்கான இணையான நாளுண்டோ?
அஃறிணை உயர்திணை வேறுபாடின்றி நாளெல்லாம்
ஆன்றோர் சான்றோர் பாடும் மங்கலநாள்!

தமிழர் பண்பாட்டை மீட்க வருக எழுச்சி பொங்கல்!
தமிழர் வீர விளையாட்டை காக்கவருக மாட்டுப் பொங்கல்!
தமிழர் அறங்காக்க வருக திருக்குறள் பொங்கல்!
தமிழர் உறவை வளர்க்க வருக காணும் பொங்கல்!

பொங்கல் வைத்துப் பண்பாட்டை மீட்டு எழுக!
குலவை ஒலியெழுப்பித் தமிழர் உரிமைப் பாடுக!
பொங்கலைப் போற்றுக புத்தொளி பெருக!





கவிஞர் வாசல்' எழிலன்
94446 17065 ✦ சென்னை



தரணியில் ஒருநாள் தமிழர் திருநாள்!
'தை'யின் முதல்நாள் தழைக்கும் பெருநாள்!

உறவுகள் எல்லாம் ஒன்றாய்க் கூட
உழவர் குடிகள் உவகை பெருக
கறையே இல்லாக் கதிரோ னுக்கும்
காலமும் உழைக்கும் எருது கட்கும்
முறையாய் நன்றி கூறும் விழாவாம்!
முன்னோர் வழியைப் போற்றும் விழாவாம்!

உழைப்பை உயிராய் எண்ணும் உழவர்
உழைப்பால் விளைந்த மஞ்சள் காய்கனி
செழித்து நிற்கும் செந்நெல் கரும்பு
சீராய் இல்லம் நோக்கி நிற்க
பழியே இல்லாப் பாங்கில் வாழும்
பண்பைப் பாரே பற்றி வாழ
களிப்பே எங்கும் கலந்து நிற்க
கனிவாய்ப் பொங்கி மகிழ்வார் இங்கே!

நன்றி மறவா திருக்க, எவரும்
நாளும் உழைத்தே வாழ, என்றும்
அன்பை, பண்பை, பணிவை, கனிவை
அகிலம் எல்லாம் பெற்றே வாழ
எண்ணிப் போற்றும் பொங்கல் விழாவாம்!

ஏய்க்கும் கற்பனைக் கதைகள் இல்லா
இனிய விழாவாம் போற்றி வாழ்வமே!





# கவிஞர் நெல்லை தீபன்

9443551706 ✦ சென்னை



கழனியிலே விளைஞ்ச பயிரை
களத்து மேட்டில் கதிரடிப்போம்
கதிரு விளைஞ்ச பூமி இப்போ
களத்து மேடா மாறிப் போச்சு!

நிலம் உழுது பயிர் செஞ்ச
வளமா எங்க வாழுறோம்?
பலமுள்ள இடைத்தரகன்
பங்குபோட்டு அள்ளுறான்!

பயிர் விளையும் நிலத்தில் இவர்
வீடுகளைக் கட்டுவார். பின்னே
பசி போக்க, துணி நனைச்சு
வயித்தில் வச்சுக் கட்டுவார்!

தண்ணீர் ஓடும் பாதையெல்லாம்
சுத்தி சுத்தி அடைக்கிறார், எங்க
கண்ணீர் ஓடை துடைக்க மட்டும்
அவர் கைகள் நீட்ட மறுக்கிறார்!

அங்க இங்க கடன வாங்கி
பயிரை வளர்த்து காக்கிறோம்
அறுப்பறுத்து நட்டமாகி
நடுத்தெருவுல நிற்கிறோம்!

கடனுக்காகத் தேய்ச்சு தேய்ச்சு
கட்டைவிரலு தேஞ்சு போச்சு!
அலைசேரும் கடல்போல
வட்டியோட வட்டி சேர்ந்து,
துட்டு கட்ட வழியில்லாம,
துப்பு கெட்டு வாழுறோம்!

விளநிலத்தை சாலையாக்க கயிறு
வச்சு அளக்கிறான்.
வெறுத்துப்போன விவசாயி கயிறு
மாட்டித் தொங்குறான்.

பொருட்டாக நினையாமல் எமை
இருளிலே இருத்திவிட்டார்
இருளுக்குள் புதைவது அவரும்தான்
அதை மறந்துவிட்டார்

கூறுபோடும் அரசியலை வீழவைத்து,
சோறு போடும் அரிசியலை
வாழவைத்து,
எந்நாளும ஏர்த்தொழிலைப்
போற்ற வேண்டும்!
எம்உழவர்களின் அவலமதை
மாற்ற வேண்டும்!

நெற்கதிர குவிச்சுப் போட்டு,
நிலம் குளிர விரிச்சுப் போட்டு,
யானை கட்டிப் போரடிக்க வேணும்
பொங்கப்
பானை முட்டிப்பால் வடிய வேணும்




# கவிமாமணி எழிலவன்

9176172657 ✦ சென்னை




மார்கழிமாதம் பிறந்துவிட்டால் மங்கையற்கு மகிழ்ச்சி!
பார்வையெலாம் விருந்தாக்கும் வண்ணக்கோல நெகிழ்ச்சி!
கார்குழலில் பூச்சூடி அழகுகூட்ட முயற்சி!
நாற்புறக் கோலமதில் பரங்கிப்பூ பெயர்ச்சி!

காலையிளங் குளிர்காற்றில் பலவண்ணக் கோலங்கள்!
வாலைக்குமரிகளின் வரிசையணி ஜாலங்கள்!
தாளமுடன் பாசுரங்கள் பாடிவரும் பாவலர்கள்!
ஞாலமதில் நடக்கின்ற பழக்கமிதே மார்கழியில்!

தைமாதம் பிறந்துவிட்டால்  தையலார்க்கு கொண்டாட்டம்!
தையல்கள் பொங்கலிட்டுக் குலவைகூவும் எழிலோட்டம்!
மைவிழியாள் மயக்கத்தில் காதலர்கள் களியாட்டம்!
கைத்தொழிலர் வெற்றிக்குக் கிடைத்திட்ட சிறப்பாட்டம்!

தைமாதப் பிறப்பினிலே தரித்திரங்கள் ஓடும்!
கையுழைப்பு உழவர்கட்கு உழைப்புப்பலன் கூடும்!
கையிருப்புப் பெருகிதனம்  மேன்மேலும் கூடும்!
கைமாற்றுக் கடன்களெலாம் சடுதியிலே தீரும்!

நடவாத திருமணங்கள் கூடிவந்து நிகழும்!
முடியாத பணியிலெலாம் வெற்றிமழை பொழியும்!
திடமிழந்த மனமெல்லாம் திடம்கொண்டு திகழும்!
சுடராக ஒளிவீசி வாழ்க்கைப்பயணம் தொடரும்!



# கவிஞர் மழலை கோபால்

9840154955 ✦ சென்னை



தை இங்கு வந்தது இத் தினமே
தங்கிடத் தந்தது இனியனவே
பொங்கிட இல்லப் பானையிலே
புகுந்திட இதயக் களிப்பினிலே!

ஆறென மாதம் அலைந்திங்கே
ஆறாய் அறுவடை அடைந்திடவும்
சேறாய் நின்ற கால்களிவை
சீராய்ச் செல்வம் சேர்த்தனவே!

புதிதாய் இல்லம் மாற்றிடவும்
பொருந்து உடைகள் ஏற்றிடவும்
மகிழ்ந்து மாடுகள் வணங்கிடவும்
நெகிழ்ந்து உறவினர் கூடிடவும்

பொங்கிடும் பொங்கல் புகுந்திங்கு
பொலிவிடும் எங்கள் குலமெங்கும்
மூத்தவர் தரும் பல வாழ்த்துகளும்
மற்றவர் தந்திடும் விழைவுகளும்
மூட்டை போன்று சேர்ந்திடுமே!
முழுதாய் நலத்தில் மூழ்கிடுமே!

சிற்றம் சிறியப் பிள்ளைகளும்
சீராய் வளர்ந்திட வந்திடுமே!
பெற்றிடப் பேறென வகைவருமே!
பெருமைப் பலவாய் உயர்ந்திடுமே!
நற் திரு நாளிவை நவின்றிட்டேன்
நல்லவர் மகிழ்வுற நல்கிட்டேன்..!!



நாடகவேந்தர் *கவிஞர் மதுரை சேகர்*
9840154900 ✦ சென்னை



எங்கள் திருநாள் பொங்கலே என்று
கண்கள் போன்றே காத்திடும் ஏழைகள்
தங்கள் நிலங்களில் விளைத்த அமுதமே
திங்கள் நன்னாளில் பொங்கலாய் மாறும்!

கயிற்றில் தொங்கி கடனைக் கழித்தநம்
வயிற்றுக் குணவு வழங்கிடும் விவசாயி
வயிற்றில் அடிக்கும் போக்கினைக் கண்டபின்
போற்ற முடியுமா பொங்கலை இன்று!!

படித்தோர் கூறிடும் அறிவுரை யாவும்
தடித்தோர் மனத்தில் பாய்ந்த பின்னும்
நடித்தே காட்டும் நயவஞ்சகர் இன்றும்
இடித்தே உரைக்கின்றார் இரண்டு மாதங்களாய்!!!

ஏற்றம் பெற்ற பொங்கல் என்று
மாற்றம் கண்டதே தில்லியில் இன்று
சீற்றம் தணியா விவசாயிகள் நடத்தும்
ஆற்றல் கொண்ட போராட்டம் என்றே!!!

கனவிலும் காணாக் கடுங்குளிர் பனியிலும்
உணவளிக்கும் உத்தமர்களின் உணர்வை மதித்திட
மனமில்லா மனிதர்களின் ஆட்சியைக் கண்டு
சினங்கொள்ளாமல் பொங்கலைப் போற்றுதல் நன்றோ?




## கவிஞர் வைஜெயந்தி

9841658477 ✦ சென்னை




நல்லோரெல்லாம் நம்பிக்கை கொள்க!
வல்லோரெல்லாம் வளமுடன் வாழ்க!
செல்லுமிடமெல்லாம் பொற்சுடர் வழங்கும்
வெல்லும் திறன்முழு ஆதவன் வாழ்க!

முக்கனிச் சுவையும் முடியா அமுதும்
எத்திசை தனிலே வரும்படி வருக!
அத்துணை நலமும் தேயத்தில் ஆகுக!
வக்கணை நாவும் நல்லதே கூறுக!

தேனமுதம்போல் மிதமாய் மாரியும்
வானிலிருந்தே வாழ்த்துதல் வேண்டும்!
நல்லோர் உழவர் மகிழ்ச்சி கொள்க
நெல்லும் தென்னையும் மா பலா கமுகும்!

விளைந்து செழிக்க இறையருள் பொழிக!
விரைந்து குவிகரம் தேவையைப் பெறுக!
விருந்து படைத்து வீடோறும் மணக்க
விரும்பிப் பட்டாடை உடுத்தி மகிழ்க!

மன்னவன் தென்னவன் மாடுமனை கண்டு
பொங்கல் படைத்துப் போற்றி வணங்குவோம்!
இதமான சூழல் இனிபுவி எங்கும்
சுகமான சோதியன் காத்தருள் புரிக!




# கவிஞர் அ. இராஜகோபாலன்

9962042494 ✦ சென்னை




குத்தி வெட்டியும் குடைந்து தோண்டியும்
குதறி மேனியில் குழிகள் செய்திடும்
பித்த மானிடர் நிற்கை தாங்கிடும்
பெற்றி கொண்டதிப் பூமி யல்லவோ?
புத்தி யின்றியே புல்லர் தருமிடர்
பொறுமை கொண்டுநாம் புறக்க ணிப்பதை
ஒத்த நன்னெறி ஒன்று வேறிலை
உயர் குறளுரை உணர வேண்டுமே!

தெருவி லெச்சிலைத் தேடி யோடியே
தின்று வாழ்ந்திடும் நாயி னும்நம
தறிவு நன்றியிற் குறைவு தானெனில்
அதனை யேற்கவே வேண்டு மல்லவோ?
உருவி லழகெமக் குள்ள தென்பதால்
உய்வு வேண்டுத லில்லை யென்பமோ?
பரிவு கொண்டதால் வள்ளு வன்இதைப்
பாருளோர்க் கெலாம் பகர்ந்து போயினான்.

என்ன பயனிதாற் கிடைக்கு மென்றுநாம்
எண்ணிச் செய்கிற காரி யங்களில்
தன்னை வளர்ப்பதோர் நோக்க மொன்றினால்
தாழ்ந்து போனவ ராவ தில்லையோ?
மண்ணில் தோன்றிய மரங்க ளொப்பவும்
மழை பொழிந்திடு மேக மொப்பவும்
உண்ணு நீர்தரு நிலைக ளொப்பவும்
உலக மானிடர் வாழ வேண்டுமே!

பள்ளம் நோக்கியே பாயு நீரென
பற்றினால் மனம் தீய நாடிடும்
தள்ள வேண்டிய பொருள னைத்தையும்
தான டைந்திடத் துன்ப மேதரும்.
உள்ளம் செல்வழித் தீமை நீக்கியோர்
உண்மை நன்மைபால் உய்ப்ப தறிவுதான்
வள்ளு வன்குறள் தவிர வேறுநூல்
வாழு நெறிகளைக் கூறி மிஞ்சுமோ?




## கவிஞர் அண்ணாமலை

9176686662 ✦ சென்னை




பொங்குதாம ரைமிளிர்த டாகந்தன் னில்குடம்
முங்கியெடுத் துத்தண்ணீர் கொண்டுநடைத் - தங்கிவரும்
பங்கையர் கண்எழிலார் பாங்குடன் வாசலிட்டப்
பொங்கலைப் போற்றுவோம் நாம்.!

வேழம் சிலிர்த்தன்ன பாய்எருது நின்றதிர்ந்தும்
ஞாலம் நடுக்குற மஞ்சு விரட்டியும்
ஆளும் இளையார்தம் வீரமதும் போற்றுவோம்
நாளாம்பொங் கல்நாளில் நாம்.!

செங்கமலப் பொய்கையில் போய்வருடும் தென்றலே
கங்குல் பகலும் உழுவோர் உகந்திடவே
தங்கும் மனத்தினில் தேங்கும் மகிழ்ச்சியில்
பொங்கலைப் போற்றுவோம் நாம்.!

தெய்வத்தைக் கைத்தொழும் செம்மையின் செவ்வியர்
பொய்த்திடாப் பெய்மழையில் பேருழைப்பால் செய்திட்டுத்
தங்கிய நல்விளைவுச் செல்வத்தால் வாழ்வுயர்த்தும்
பொங்கலைப் போற்றுவோம் நாம்.!

தைமகள் பூப்படைந்து பூக்குளித்து பூரித்து
வைப்பாக வண்வுழவர் பெற்றியும் கைப்பொருளாய்த்
தங்கண்ணில் காட்டும் எழிலழகாய் ஏற்றிவரும்
பொங்கலைப் போற்றிடுவோம் நாம்.!

முகில்கருமை கூந்தலாய் மூண்டெழுந்த பாவையர்
வகிடெடுத்த வார்ப்பாய் வரப்பணைந்த நெற்கூட்டம்
அகன்றமைந்த செல்வம் பெருக்கெடுத்துச் சேர்ந்துவர
புகழ்ப்பொங்கல் நாள்போற்று வோம்.!

செங்கமலப் பொய்கையில் போய்வருடும் தென்றலே
தங்குதடை இல்லாதெம் வாழ்வினில் மங்காத
கங்குல் பகலும் உழுவோர் உகந்திடவே
பொங்கலைப் போற்றுவோம் நாம்.!






கவிஞர் செ.புனிதஜோதி

8760798455 ✦ சென்னை




கதிரவனுக்கு
மஞ்சளும் சிவப்பு கலந்த வண்ணத்தைப்பூசி
அவன் கைகளுக்கு வானவில்
வண்ணத்தை வார்த்து
மஞ்சள் குலையை நட்டு
பச்சையும், கருப்பையும் ஏற்றவளாய்
கரும்புதோகையை இருபக்கமும் நிறுத்தி
முக்கண் வடிவிலே செங்கலை வைத்து
மண் பானையை அதன் மேல் வைத்து
மணப்பெண் அலங்காரத்தைப்போல்
பூச்சூடி மங்கல வண்ணத்தை வார்த்து
மஞ்சள்,குங்குமம் பொட்டிட்டு
மாவிலைத் தோரணத்தைச்சூடி
குத்து விளக்கை ஏற்றி
தட்டிலே தேங்காய், வாழைப்பழம்,பூ
பூசணி,பச்சரிசி, வெல்லம்,ஏலக்காய்,
முந்திரி,நெய் சகிதமும் வைத்து
பொங்கல் பொங்கி, பொங்கல்
பானையைத்தழுவி நிற்க!

அம்மா கைகளால் கரண்டியில்
கிண்டிக்கொண்டே
குலவையிட்ட மாதிரி வாயைக் கூவுவதைப் போல்
வரைந்து முடித்தேன்
வாசலிலே பொங்கல் கோலம்....
பொங்கலோ பொங்கல் என்ற வாசகத்தையும் எழுதி
இனிமையாய் வரவேற்றேன் வாசலிலே....
பொங்கலைப் போற்றுவோம்
என்ற தலைப்பிலும் கவிதை
புலனத்தின் வழியே பதிவிட்டேன்
இருந்தபோதும்
எங்கள் வீட்டில் இரண்டு விசிலில்
அடித்து அடங்கியது பொங்கல்
இனிமையாய்!




# முனைவர் கே. கிருஷ்ணகுமாரி

6369416726 ✦ சென்னை




மார்கழி முடிய மங்கலம் பொங்க
மனை வாசலில் மாக்கோலமிட்டு புது
மஞ்சள் செடி இட்டு
மானுடம் அழிக்க வந்த
மாசை விரட்டி
மன மகிழ்வுடன் மங்கையர்
'தை'மகளை வரவேற்க !
மண்மகள் மகிழ்வாய் மகசூலைத் தர

மகசூல் பெருக்கிய
மாடுகள் ஓய்வெடுக்க
மாரி மகிழ்ந்து மலராய்
'மா' நிலம் பார்த்து தூவ
மண்வாசனை மணக்க
மங்கா ஒளியோன்
மறைந்திருந்து காக்க!

மங்கல கீதம் இசைக்க
மண் சட்டியில் மங்கையர் பொங்கலிட
மகிழ்ச்சி பொங்கப் பொங்க
மங்காப் பொங்கல் பொங்க
மாற்றங்கள் தரும் பொங்கலாய்!
மாந்தரைக் காக்கும் பொங்கலாய்ப் பொங்க
மகிழ் வணக்கத்துடன்
பொங்கல் வாழ்த்துக்கள்!!



கவிசக்கர.கண்ணபிரான்

9952996518 ✦ சென்னை



செந்தமிழ்மண் நீரெடுத்துச்
செங்கரும்புச் சாறெடுத்துப்
பாலுடனே நெய்மணக்கப்
பச்சரிசிச் சக்கரையில்
பொங்கல் வைப்போமே - இன்பப் பொங்கல் வைப்போமே - தைத்
திங்கள் முதல் நாளில் இன்பம்
பொங்க வைப்போமே

ஏரிழுத்துக் களைத்திருக்கும்
எங்கள் வீட்டு எருது கன்று
இருபொழுதும் பால்கொடுக்கும்
எருமைப் பசு இவைகளுக்கும்
தீனித் தினவு ஊட்டி நலம்
சேர்த்திடுவோமே - தினம்
தெய்வங்களைப் போலவற்றைப் போற்றிடுவோமே!

காரிருளை ஓட்டிஇளங்
கதிரொளியைக் காட்டிவரும்
ஏருழவில் வாழும்வையம்
ஏற்ற மழைப் பொழிய வரும்
சூரியனைச் சூடம் ஏற்றி
கும்பிடுவோமே - சுகம்
சூழ்வதற்கும் வாழ்வதற்கும்
நம்பிடுவோமே!

தைமகள்தான் வரும்வரைக்கும்
தவமிருப்போம்! மார்கழியில்
கை கொடுக்கும் காசிருக்கும்
களஞ்சியம்போல் மாசியிலே பங்குனியில் பன்மடங்காய்
பயனடைவோமே! - வரப்
பார்த்திருக்கும் சித்திரைக்கு
வழி விடுவோமே!



# கவிஞர் இசைக்கவி ரவிச்சந்திரன்

✦ சென்னை



துயிலும் நேரத்தைக் குறைத்து
தூய நீராடி மார்கழி நோன்பினைத்
தூய்மை வழியில் பக்தியை நாடித்
தூய ஆகமம் உரைத்தாள் ஆண்டாள்!

தொய்மைப் பண்பில் ஆண்டாள் உறைதல்
பையப் பைய மனதில் நிறைந்தது
பழையன கழிந்து புதியன பிறந்தது
தையத் தைய தைத் திருநாள் மலர்ந்தது!

எண்ணம் முழுவதும் உறவு முறை ஒலித்தது!
வண்ண முககவசம் எழில் கூட்டி எச்சரித்தது!
சமூக இடைவெளி இடை இடையே தவறினாலும்
சமத்துவம் தூய்மை தவறாமல் பிரதிபலித்தது!

உழவன் என்றும் நமக்கு எடுத்துக்காட்டு!
உழவர் திருநாள் மலர்க என்று பறைகொட்டு!
உழவன் இனிது வாழ முரசு கொட்டு!
உழவேதான் சமுதாய நலம் எழுதுவாம் கல்வெட்டு!







கவிஞர் ஆசூர் க. தங்கதாசன்
9445406677 ✦ சென்னை



உழைப்பவர் உரிமையை உணர்த்திடும் பொங்கல்!
உழவனின் பெருமையை உரைத்திடும் பொங்கல்!
பிழைத்திடும் ஏழைகள் மகிழ்ந்திடும் பொங்கல்!
பிழையிலாத் திருவிழா பெருமைப் பொங்கல்!

இயற்கையை வணங்கிடும் இனியநல் பொங்கல்!
இயற்கையின் மகிமையோ வெளிப்படும் பொங்கல்!
உயர்ந்தவன் தாழ்ந்தவன் பிரிவினை நீங்கி
ஒற்றுமை யுடன்நாம் வழிபடும் பொங்கல்!

குழு,மதம், இனம்,மொழி பிரிவுகள் நீங்கிக்
குவலயம் வணங்கிடும் இயற்கையின் பொங்கல்!
உழவனின் உயிர்த்துணை உன்னத செல்வம்
உழைத்திடும் காளையை வணங்கிடும் பொங்கல்!

பழகிய நண்பர்கள் பலரிடம் சென்று
பரிசுகள் கேட்டிடும் உரிமையின் பொங்கல்!
விழுமியம் தமிழர்க்கு இதுவெனச் சொல்வோம்!
வியப்புடன் அனைவரும் வணங்கியே மகிழ்வோம்!

உழவெனும் தொழிலே உலகினுக் குணவு
உயர்வுடன் அளித்திடும் உன்னதத் தொழிலே!
பழியிலாத் தொழிலினை அனைவரும் சேர்ந்து
பாதுகாத் திடநல்ல வழிவகை செய்வோம்!

பொங்கலோ பொங்லெனப் பொங்கிடும் போதில்
பொங்கிடா மனங்களும் பொங்கிடும் அன்று!
பொங்கலும் உலகத்தின் பொதுவுடை மையாம்
பொங்கட்டும் மகிழ்ச்சிகள் பொங்கலோ பொங்கல்!



*கவிஞர் சே. பானுரேகா*

6369086212 ✦ சென்னை



வானமன்று வாரியென வாழ்த்திவிட்டுத் தந்ததெலாம்
வீழ் கொரோனா வீழ்த்திவிட்டுப் போனதையா!-அட
தானமுடன் கானமுடன் தாளமிட்டுப் பொங்கலிட்டுத்
தின்றுவிளை யாடியது போன தை யா!-மனம்-- காணுதையா!

நாலுபேரு சேரலியே நாவினிக்கப் பாடலியே
நொந்துடலாய் நம்முடலும் நோவுதையா - அட
பால்பொங்கிப் பெரும்பொங்கல் பாசமுடன் சேர்ந்திங்குப்
பாலருடன் ஆடியது போன தை யா - மனம்-- காணுதையா

அங்குமிங்கும் போகாமல் அழகுமுகம் மூடாமல்
ஆடமுடியாமல் போனதையா - அட
மங்கலமாய்ச் செங்கரும்பு மஞ்சளுடன் வாசலிலே
பொங்கலிட்டுத் தின்றதெலாம் போன தை யா - மனம் காணுதையா!

பேருந்தும் சினிமாவும் பார்ப்பதற்கே அச்சமாகிப்
பார்க்குமாசை நெஞ்சைவிட்டுப் போனதையா - அட
பேருவகை கொண்டெங்கும் பேரூரைச் சுற்றியது
போன தை யா - மனம் காணுதையா!

ஆவதைநாம் பார்க்கலாமே அஞ்சுபத்துச் சேர்க்கலாமே
ஆசையுடன் கொஞ்சிவிளையாடலாமே - பிறர்க்கு
ஈவதுடன் நாம்மகிழ்ந்து எல்லோரும் ஒன்றுகூடி
இன்பமுடன் புத்தரிசி பொங்கலாமே - சேர்ந்து--- திங்கலாமே!

சாதிமத பேதமின்றிச் சங்கமித்து நாமிணைந்து
சந்தோஷப் பொங்கலிட்டுக் கூடுவோமே - இனிப்
போதுமென்ற எண்ணமுடன் புத்துலகைக் காண்போமே!
பொங்குகவே பொங்கலென்று பாடுவோமே - சேர்ந்து ஆடுவோமே!!





கவிஞர் பொதிகை செல்வராசன்

9445406677 ✦ சென்னை



போற்றுவோம் போற்றுவோம் பொங்கலைப் போற்றுவோம்
ஏற்றுவோம் உழுபவன் தன்னையே ஏற்றுவோம்!
தூற்றுவோர் உள்ளத்தை தூசென எண்ணியே
மாற்றுவோம் மாற்றுவோம் களைத்தவன் வாழ்வையே!

உழுபவன் உணர்வினை எண்ணியே வாழுவோம்
பழுதிலா வாழ்வினில் பார்த்தே உயர்த்துவோம்!
எழுத்தினில் அவனையே எழுதி மகிழ்வோம்
தொழுதிடும் இறைவனைத் தொடர்ந்து வணங்குவோம்!

வானம் பொய்த்தால் வாடிடும் அவனையே
ஊனம் இன்றியே காத்திட முயலுவோம்!
தானமாய்த் தானியம் தந்திடும் தன்மையை
மானிடம் காத்திடும் மருந்தென எண்ணுவோம்!

உழவனின் தோழனாய் உதவிய காளையை
பழக்கமே இல்லார் பார்த்திட இயலுமோ?
இளக்காரம் கொண்டு இகழ்வார் தம்மையும்
உலகினில் இனியும் உயர்த்திடல் கூடுமோ?

பிறக்கும் தையின் முதல்நாள் தானே
இறவா தமிழின் புத்தாண் டாகும்!
மறவா திருப்போம் மாண்பினைக் காப்போம்!
உறவாய் அதனை உயர்வாய்ப் போற்றுவோம்!

ஒற்றுமை கொண்டு உரிமையைப் பேணுவோம்
பற்றினைக் கொள்ளார் பாதகம் விரட்டுவோம்!
சொற்சுவைத் தமிழைத் தூக்கி நிறுத்திக்
கற்பெனக் கற்றுப் பொங்கலைப் போற்றுவோம்!



# கவிஞர் ஹரிகோபாலகிருஷ்ணன்

✦ சென்னை



புத்தரிசி சிறுபருப்பு புதுப்பானை சேரும்
சத்துடைய கன்னலுமே கனிவுடனே இணையும்
புத்துருக்கு நெய்யுடனே பாகுவெல்லம் பாயும்
எத்திக்கும் பொங்கல் மணம் பாவையர்க்கு மேவும் !

பொங்கலோ பொங்கலெனும் குரல்வானைத் தொடுமே!
மங்கல வாழ்த்தொலி மல்கிடும் திசையெட்டும்
நறுமணமும் தென்றலோடு கலந்தே வரவும்
நல்லதே நடக்குமென நாடெங்கும் உரைக்கும்!

பூத்திடும் புதுமுகம்  பூவுலகு எங்கிலும்
பெரும்தொற்றுப் பாரினில் இருந்தே பறந்திடும்
எய்திடும் உவகையை உலகம் யாவும்
பொங்கிடும் புதுவாழ்வு பொங்கல்நாள் முதலே!

முகிலோடு முகில் மோதி மழையாய்ப் பொழியும்
பெய்திடும் மழையினால் வையம் வாழும்
பொங்கும் நீரூற்றால் கண்மாய்கள் நிறையும்
காலமெல்லாம் நீர்ப்பெருகி ஆறெல்லாம் ஓடும்!

நல்லறங்கள் நாகரீகம் நாட்டையே பரவும்
அல்லலுறும் துன்பமெலாம் அறவே மறையும்
மெல்லிறகு வண்டினங்கள் நறவுண்டு மகிழும்
நல்லிணக்கம் இணைந்து நலம்யாவும் சேர்க்கும் !

செங்கரும்பாய் இனித்திடும் செந்தமிழ் நாடெங்கும்
திங்களைத் தலைச்சூடி யுள்ள ஈசனால்
அறத்தோடு இணைந்த இன்பம் மலர்வதால்
சிறந்திங்கே வாழ்வர் பாரிலுள்ளோர் யாவருமே!



## கவிஞர் மதுரை பாபாராஜ்

✦ சென்னை



தையே வருக!தமிழ்ப்புத்தாண்டே வருக!
தமிழ்ப்புத் தாண்டின் தொடக்கமே தைத்திங்க ளாகும்!
கணித்தது பொய்யில்லை!கல்வெட்டுச் சான்றால்
தமிழினம் கொண்ட தனித்தன்மை கண்டோம்!
தமிழ்ப்புத் தாண்டை வரவேற்று வாழ்த்து!
தமிழ்மணக்க கூடிநின்று வாழ்த்து.

உழவர் திருநாள்
கைகூப்பி வாழ்த்துவோம்!
உயிரூட்டி நாளும் நடமாட வைக்கும்
செயலி! உழவரைக் கைகூப்பி வாழ்த்து!
உயர்த்தி மகிழ்வோம் உழைப்பை மதித்து!
உளமார நன்றியைக் கூறு.

வள்ளுவர்நாள் வாழ்த்து!
வாழ்வியல் நற்கருத்தை உள்ளடக்கி வள்ளுவர்
பாவினத்தில் ஏழேழு சொற்களில் அற்புதமாய்
ஆயிரத்து முந்நூற்று முப்பது தேன்குறளால்
வேலிகளைத் தாண்டாமல் வாழவழி காட்டுகின்றார்!
வேலிக்குள் வீறுநடை போடு.

எங்கெங்கு வாழ்ந்தாலும் மக்களின் வாழ்வியல்
பண்பும், தனிமனித நல்லொழுக்கப் பண்புகளும்
இங்கே பொதுவாகும்! செந்தமிழே வள்ளுவத்தை
என்றும் பொதுமுறையாய்ப் போற்று.

# இலக்கியத் தேன்சாரல், பெங்களூர்

## குழுவினர்



அமரன்



கே.ஜி. ராஜேந்திரபாபு



ஜெய்சக்தி



பத்மநாபன்



ஹரீஷ் சின்னராஜ்